ஸ்வரூபியும் ஈசுவரருமாகிய ஸ்ரீமகாவிஷ்ணு சாதுக்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பதற்கும், தர்மத்தைக் காப்பாற்றுவதற் காகவுமே அவதாரஞ் செய்கிறார். அப்படிப்பட்ட பகவான் சம்ப ளக் கிராமத்தில் பிரதானராகவிருக்கும் விஷ்ணுயசஸ் என்ற பிராம்மணனுடைய வீட்டில் கல்கியென்ற திவ்ய நாமதேயத் துடன் அவதரிப்பார். அந்தக் கல்கி அசத்துக்களைக் கொல் வதற்குச் சாதனமாகத் தேவர்களால் கொடுக்கப்பெற்ற வேக சாலியான குதிரையின்மீதேறி ஒப்பற்ற தேஜஸ்வியாக பூமியில் சஞ்சரித்து அரசர்களென்ற வேஷந் தரித்தவர்களும் உண்மையில் திருடர்களுமான துஷ்டர்களைக் கோடிக்கணக்காக வதஞ்செய்வார். அப்பொழுது பகவான் பூசிக்கொண்டிருக்கும் சந்தனத்தின் வாசனையுள்ள காற்றை முகர்ந்தவுடன் அந்தத் துஷ்டர்களுடைய மனம் சுத்தமாகிவிடும். அந்தக் காலத்திய சகல ஜனங்களுடைய மனமும் ஆசை, துவேஷம் இவைக ளில்லாமல் சுத்தமாகும். அவர்களுடைய புத்திர சந்ததி பெருகும். சுத்த சத்வமூர்த்தியான வாசுதேவனை எல்லா ஜனங்களும் மனத்தில் ஸ்திரமாக வைத்துக்கொண் டிருப்பார்கள். எப்பொழுது பகவான் கல்கியாக அவதரிப் பாரோ, அப்பொழுது கிருதயுகம் ஆரம்பிக்கும். அப்போது ஜனிக்கும் பிரஜைகளும் ஸாத்விகர்களாக இருப்பார்கள். சந்திரன், சூரியன், பிருகஸ்பதி ஆகிய மூன்று கிரகங்களும் புஷ்ய நக்ஷத்திரத்தில் சேர்ந்து எப்பொழுது பிரவேசிப்பார்களோ, அப்பொழுது கிருத யுகம் ஆரம்பிக்கும். சந்திர வம்சத்திலும், சூர்ய வம்சத்திலும் சென்ற அரசர்களையும், வரும் அரசர்களையும் சுருக்கமாகச் சொன்னேன். ஓ பரீக்ஷித்து மகாராஜ! நீர் ஜனித்தது முதல் நந்தனுடைய பட்டாபிஷேகம் வரையிலுள்ள காலம் ஆயிரத்து நூற்றுப் பதினைந்து வருஷங்கள். (நந்தனுடன் சந்திர வம்சம் முடிந்ததென்று கருத்து. மேற்சொல்லிய 1115-

வருஷங்களென்பது வேறு ஒரு கணக்காகச் சொல்லப்பட்டிருக்கிறது. உண்மையில் 1498-வருஷங்களாகின்றன.) ஸப்த ரிஷிகளுக்குள் உதயகாலத்தில் எவர்கள் உதயமானவர்களாய் முந்தி காணப்படுகிறார்களோ, அவர்களுக்கு மத்தியில் சமமாக எந்த நக்ஷத்திரம் இரவில் காணப்படுகிறதோ, அந்த நக்ஷத்திரத்துடன் ஸப்தரிஷி மண்டலம் நூறு வருஷங்களிருக்கிறது. அந்த ஸப்த ரிஷிகள் உம்முடைய காலமாகிய இப்போது மக நக்ஷத்திரத்திலிருக்கிறார்கள். ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் சுத்த ஸத்வமான சரீரம் பூமியைவிட்டு எப்பொழுது வைகுண்டத்திற்குச் சென்றதோ, அப்பொழுது கலி லோகத்தில் பரவியது; ஜனங்கள் பாவத்தில் நோக்கமுள்ளவர்களானார்கள். லக்ஷ்மியின் பர்த்தாவாகிய பகவான் தம்முடைய பாதாரவிந்தங்களால் பூமியைத் தொட்டுக்கொண்டிருந்த வரையில் கலி பூமியில் பரவாமலிருந்தது. மக நக்ஷத்திரத்தில் ஸப்தரிஷிகள் ஸஞ்சரிக்கும்பொழுது கலியுகம் ஆரம்பித்தது. அந்தக் கலியின் காலம் தேவமானத்தால் ஆயிரத்து இருநூறு வருஷங்கள் (மனுஷ்யமானத்தால் 4,32.000-வருஷங்களென்று கருத்து). அந்த ஸப்தரிஷி மண்டலம் பூர்வா நக்ஷத்திரத்திற்குச் செல்லும் சமயம் நந்தருடைய ராஜ்யகாலமாகும். அதுமுதல் கலிக்கு விருத்திகாலம். (வடபுறமான ஏழு நக்ஷத்திரங்களுடையது ஸப்தரிஷி மண்டலமெனப்படும். எல்லாவற்றிற்கும் முதலில் மரீசி, அவருக்குப் பின் வசிஷ்டர், அவருக்குப் பின் அங்கிரஸ், அவருக்குப் பின் நாற்கோணமாகியதில் ஈசான திக்கில் அத்ரி, தெற்கில் புலஸ்தியர், மேற்கில் புலஹர், வடக்கில் க்ருது, பரீக்ஷித்தின் காலத்தில் ஸப்தரிஷி மண்டலம் மக நக்ஷத்திரத்தில் வந்து 500-வருஷங்களாயினவென்று தெரியவருகிறது.) என்றைய தினம் ஸ்ரீ கிருஷ்ணன் வைகுண்டஞ் சென்றாரோ, அந்தத் தினத்தில் கலியுகம் ஆரம்பித்ததென்று பெரியோர்கள்

சொல்லுகிறார்கள். தேவமானத்தில் ஆயிரம் வருஷங்கள் சென்றபின் திரும்பவும் கிருதயுகம் வரும். அப்பொழுது மனிதர்களுடைய மனம் ஆத்மஸாக்ஷாத்காரத்திற்குத் தகுந்ததாக ஆகும். இப்படி மநுவின் வம்சம் சொல்லப்பட்டது. இப்படியே பிராம்மண, வைசிய, சூத்திரர்களுடைய வம்சங்களும் ஒவ்வொரு யுகங்களிலும் அறியப்படவேண்டும். மேற்காட்டிய மகான்களான அரசர்களுடைய பெயர் மாத்திரம் இப்பொழுது வழங்கிவருகிறது. அவர்களுடைய சரித்திரமும் கீர்த்தியும் பூமியிலிருக்கின்றன. சந்தனுவின் சகோதரராகிய தேவாபியும், இக்ஷ்வாகுவின் வம்சத்தில் ஜனித்த மருவென்பவரும் மிக்க யோகபலமுள்ளவர்களாகக் கலாப கிராமத்தில் வசிப்பார்கள். அவ்விருவர்களும் இக்கலியுகத்தின் முடிவில் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் உத்தரவினால் வர்ண தர்மங்களையும், ஆச்சிரம தர்மங்களையும் முன்போல் நடக்கும்படி செய்வார்கள். மேற்காட்டிய வண்ணம் கிருதம், திரேதா, துவாபரம், கலி யென்ற நான்கு யுகங்களை ஸ்ரீபகவான் பூமியில் பிரவர்த்திக்கச் செய்கிறார். ஓ மகாராஜா! என்னால் சொல்லப்பட்ட இந்த அரசர்கள் இந்தப் பூமியைத் தங்களுடையதென்று நினைத்து அபிநிவேசத்தை அடைந்திருந்து முடிவில் இப்பூமியைவிட்டு மரணமடைந்தார்கள். இந்தச் சரீரத்திற்கு "ராஜா" என்ற பெயரிருந்தாலும் கடைசியில் கிருமி (புழு), விட் (அமேத்யம்), பஸ்மம் (சாம்பல்) என்ற பெயர் ஏற்படுகிறது. அப்படிப்பட்ட சரீரத்திற்காகப் பிராணி இம்சை செய்யலாமா? பிறரை இம்சிப்பதால் கஷ்டம் நேருமே யல்லாமல் சுகங் கிடைக்கிறதில்லை. ஆனதால் பிராணிகளை இம்சிப்பவன் தனக்கு இதமானதைத் தெரிந்துகொண்டவனல்ல. மேலும் அரசர்கள் "அகண்டமான இந்தப் பூமி நம்முடைய பெரியோர்களால் பரிபாலிக்கப்பெற்று நம்முடைய வசத்திலிருக்கிறது. இது நம்முடைய புத்திரன், அவனுடைய

புத்திரன் முதலியவர்களுக்கு வசப்படவேண்டுமே, அதற்கு என்ன செய்யலாம்" என்று யோசிக்கிறார்கள். பின்னும் பிருதிவி, ஜலம், தேஜஸ் இவைகளால் ஏற்பட்ட சரீரத்தைத் தாமென்று அபிமானித்து, பூமியைத் தம்மைச் சார்ந்ததென்று நினைத்து மூடர்களாகி, பூமி, சரீரம் ஆகிய இரண்டையும்விட்டு மரணமடைந்தார்கள். எந்தெந்த அரசர்கள் தங்களுடைய பலத்தால் பூமியை அநுபவித்தார்களோ, அவர்கள் சில காலம் சென்றபின் மரணமடைந்தார்கள். அவர்களுடைய கதைதான் எஞ்சியது. (ஆனதால் அனித்தியமான சரீரம், பூமி இவைகளில் அபிமானம் வைத்து அதற்காகப் பாவத்தைச் செய்வது உசிதமல்லவென்று கருத்து.)

# அத்தியாயம் 3

## கலி காலத்திய பிரஜைகளின் சுபாவம்

1—15. பூமியை ஜயித்துச் சுவாதீனஞ்செய்துகொள்வதற்காக முயன்றுகொண்டிருக்கும் அரசர்களைப் பார்த்து, "மிருத்யுவிற்கு விளையாட்டுக்கருவிகளாகவிருக்கும் இந்த அரசர்கள், சத்துருக்களை ஜயித்துத் தன்னைச் சுவாதீனஞ் செய்துகொள்வதற்காக முயலுகிறார்கள். என்ன ஆச்சரியம் !" என்று பூமிதேவி மிகவும் பரிகாசஞ்செய்கிறாள். இந்த அரசர்கள் நுரைபோல் அனித்தியமாகவிருக்கும் சரீரத்தில் மிக்க அபிமானம் வைத்து, "முதலில் இந்திரியங்களை ஜயித்துப் பின்பு மந்திரிகளையும், பட்டினத்து ஜனங்களையும், ஆப்தர்களையும் வசப்படுத்திக்கொள்வோம். பின்பு யானைப் படைகளையும், இவனுடைய சத்துருக்களையும் சுவாதீனப்படுத்திக்கொண்டு கிரமமாக நான்கு சமுத்திரங்களுக்குட்பட்ட பூமியை ஜயிப்போம்" என்ற ஆசை கொண்டு சமீபத்திலிருக்கும் யமனைக் கவனிக்கிறதில்லை.

அப்படிப்பட்ட அரசர்கள், மிக்க வித்வான்களானாலும் அவர்களுடைய எண்ணம் பூர்த்தியாகிறதில்லை. நான்கு சமுத்திரங்களுக்குட்பட்ட பூமியை ஜயித்துச் சுவாதீனஞ் செய்துகொண்ட பின்பும் அதிக ஆசையால் சமுத்திரத்திலும் பிரவேசிக்கிறார்கள், இந்திரியங்களை ஜயித்ததற்கு மேற்காட்டிய பூமிலாபம் பயனாகுமா ? மோக்ஷமல்லவா அதற்குப் பயன் ? மேலும், மநு முதலியவர்கள் பூமியைப் பரிபாலித்தும் அதனை விட்டுத் தாங்கள் வந்த வழியே சென்றார்கள். அப்படிப்பட்ட பூமியை வசப்படுத்திக்கொளவதாக அரசர்கள் நினைக்கிறார்கள். ஆனால் இவர்கள் புத்தியற்றவர்கள. " இந்த ராஜ்யம் என்னுடையதென்ற மமதையை அடைந்து, புத்திரனும் பிதாவும் சண்டை செய்கிறார்கள் ; சகோதரர்கள் அடித்துக்கொள்ளுகிறார்கள். அட மூட ! இந்தப் பூமி என்னுடையது ; உனக்கு இதில் சம்பந்தமில்லை என்று சொல்லி ஒருவருக்கொருவர் அடித்துக் கொண்டு என் விஷயமாக (பூமியின் விஷயமாக) மரணமடைகிறார்கள். பின்னும் பிருது, புரூரவஸ், காதி, பரதர். நகுஷர், அர்ஜுனர், மாந்தாதா, சகரர், ஸ்ரீராமன், கட்வாங்கர், துந்துகா, ரகு, திருணபிந்து, யயாதி, சரியாதி, சந்தனு, கயர், பகீரதர், குவலயாச்வர், ககுஸ்தர், நளன், நிருகர், ஹிரண்ய கசிபு, விருத்திரன், உலகங்களை உபத்திரவித்த ராவணன், நமுசி, சம்பரன், நரகாசுரன், ஹிரண்யாக்ஷன், தாரகன், மற்றுமுள்ள அசுரர்கள்,அரசர்கள் ஆகிய எல்லாரும் எல்லாவற்றையும் அறிந்தவர்கள் ; மிக்க சூரர்கள்; எல்லாரையும் ஜயித்தவர்கள் ; சத்துருக்களால் ஜயிக்கப்படாதவர்கள் ; அப்படிப்பட்ட மரண தர்மமுள்ள மேற்காட்டியவர்கள்; மரண தர்மமற்ற என்னைத் (பூமியை) தங்களுடையவளென்று நினைத்து, தங்களுடைய எண்ணம் பூர்த்தியடையாதவர்களாகி மரணமடைந்தார்கள். அவர்களுடைய கதைமாத்திரம் எஞ்சியிருக்கிறதேயொழிய

அவர்களில்லை: இப்படி காலத்தால் செய்யப்பட்டிருக்கிறது. (இப்படி 'பூமி அரசர்களைப் பரிகசிக்கிறதென்று தாத்பரியம்.) ஓ மகாராஜ! மிக்க மகிமையுள்ளவர்களாகி, பூமியைப் பரிபாலித்து, கீர்த்தியை ஸ்தாபித்துப் பரலோகஞ்சென்ற பெரியோர்களுடைய கதையைச் சொன்னேன். ஆனால் அந்த அரசர்களைப் போலிருக்கவேண்டுமென்று நினைக்கக்கூடாது. மேற்காட்டிய கதைகளைக் கேட்டு, விஷயங்களில் வைராக்கியத்தை அடைந்து ஞானத்தைச் சம்பாதிக்கவேண்டும். விஷயங்களில் வைராக்கியமுண்டாவதற்காகவே முந்திய அரசர்களுடைய கதை நிரூபிக்கப்பட்டது. ஆனதால் ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் ஸ்திரமான பக்தியை விரும்பி எப்பொழுதும் பகவானுடைய சரித்திரங்களைக் கேட்கவேண்டும்; அதுவே அமங்களத்தை நிவர்த்திக்கும்" என்று சுகர் சொன்னார்.

16—17. அதனைக் கேட்ட அரசன் சுகரை நோக்கி, "ஓ பகவன்! கலியுகத்தில் தோஷங்கள் விருத்தியடையுமே, அவைகளை அக்காலத்தில் ஜனங்கள் நிவர்த்தித்துக்கொள்ளும் உபாயமென்ன? மேலும் யுகங்களையும், அந்த யுகத்தின் தர்மங்களையும், பிரளயம், கல்பம் இவைகளுடைய பிரமாணங்களையும் உண்மையாகச் சொல்லும். மேற்காட்டியவை எல்லாவற்றிற்கும் ஈசனாகிய மகாவிஷ்ணுவின் ரூபமாகிய காலத்தின் கதியல்லவா?" என்றார். (காலரூபியான பகவானுடைய கதியைக் கேட்பதால் பாஹ்ய விஷயத்தைப்பற்றிக் கேட்பதல்லவென்று கருத்து.)

18—25. அதனைக் கேட்ட சுகர் அரசனை நோக்கி, "கிருத யுகத்தில் சத்தியம், தயை, தவம், தானம் என்று நான்கு பாதங்களுடன் தர்மமிருக்கும். அக்காலத்திய ஜனங்கள் அதை ஆதரிப்பார்கள். (தர்மத்தின் நான்கு பாதங்களில் தானமென்பது அபயத்தைக் கொடுப்பதென்று அர்த்தம். அதே, சௌச

மென்று முதல் ஸ்கந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.) அக் காலத்திய ஜனங்கள் பெரும்பாலும் இடைத்தறைக்கொண்டு சந்தோஷத்தையடைந்தும், தீனர்களிடத்தில் தயவுள்ளவர் களாகவும், பிராணிகளிடத்தில் அன்புள்ளவர்களாகவும், இரண்டு வகையான இந்திரியங்களை ஜயித்தவர்களாகவும், பொறுமையுள்ளவர்களாகவும், எல்லாவற்றையும் சமமாகப் பார்ப்பவர்களாகவும், ஆத்மாவிடத்திலேயே ரமிப்பவர்களும், ஆத்மஞானத்தை அப்யஸிப்பவர்களாயு மிருப்பார்கள். த்ரேதா யுகத்தில் அதர்மம் உலகத்தில் பிரவேசிக்கிறது. அதனுடைய பாதங்களாகிய பொய், இம்சை, பேராசை, சண்டை ஆகிய இவைகளால் முறையே தர்மத்தின் பாதங்களாகிய சத்தியம், தயை, தவம், தானம் ஆகிய இவைகளுடைய நாலிலொரு பாகம் குறையும். அக்காலத்திய ஜனங்கள் யாகம், தவம் இவை களில் நோக்கமுள்ளவர்களாகவும், அதிக இம்சையில் நோக்க மில்லாதவர்களாகவும், அதிக ஆசையில்லாதவர்களாகவும், பிராம்மணரையே மேலானவர்களாகக் கொண்டவர்களாகவும், வைதிகமான கர்மங்களில் பிரியர்களாகவு மிருப்பார்கள். த்வாபர யுகத்தில் பொய், இம்சை, அதுஷ்டி, த்வேஷம் முதலிய அதர்மத்தின் பாதங்களால் தர்மத்தின் பாதங்களாகிய சத்தியம், தயை, தவம், தானம் இவைகளில் பாதி குறைகின் றது. அக்காலத்தில் ஜனங்கள் கீர்த்தியைச் சம்பாதிப்பதில் பிரியமுள்ளவர்களாகவும், வேதாந்தியயனத்தில் மிகப் பிரிய முள்ளவர்களாகவும், பணக்காரர்களாகவும், கர்வமுள்ளவர் களாகவும், க்ஷத்திரியன், பிராம்மணன் இவர்களைப் பிரதானர் களாக நினைத்தவர்களாகவு மிருப்பார்கள். கலியில் அதர்மத் தின் பாதங்கள் விருத்தியடையும். அதனால் தர்மத்தின் பாதங் களில் நாலிலொரு பாகந்தான் மிஞ்சியிருக்கும். அந்த நாலி லொரு அம்சமும் கலியுகத்தின் முடிவில் நாசமடையும்.

(அதர்மமே பரவுமென்று கருத்து.) அக்காலத்து ஜனங்கள் விஷயங்களில் மிக்க ஆசையுள்ளவர்களாகவும், தயையற்றவர்களாகவும், காரணமின்றி விரோதிப்பவர்களாகவும், அதிருஷ்டமற்றவர்களாகவும் அதிக ஆசையுள்ளவர்களாகவுமிருப்பார்கள். மேலும் சூத்திரர்கள், மீன் பிடிப்பவர்கள், வேடர்கள் ஆகிய இவர்களே பிரதானர்களாக இருப்பார்கள். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்கள் புருஷனிடத்திலிருக்கின்றன. அவைகள் காலத்தால் தூண்டப்பட்டு மேற்காட்டியவண்ணம் மாறுகின்றன. மனம், புத்தி, இந்திரியங்கள் ஆகிய இவைகள் எப்பொழுது மிக்க சத்வகுணமுள்ளவையாக இருக்கின்றனவோ அப்பொழுது தியானம், ஞானம் இவைகளில் பிரியமுண்டாகிறது. அந்தக் காலமே க்ருதயுகமெனப்படுகிறது. எந்தக் காலத்தில் தர்மத்திலும், கீர்த்தியிலும் ஜனங்களுக்குப் பிரியமுண்டாகிறதோ, அந்தக் காலம் த்ரேதாயுகமெனப்படுகிறது. அப்பொழுது ரஜோ குணம் அதிகமென்று தெரிந்துகொள்ளும். த்வாபர யுகத்தில் ரஜஸும், தமஸும் பிரதானங்களானதால் கிடைத்ததில் சந்தோஷப்படாமல் அதிக ஆசை கொள்ளுவது, அகங்காரம், தம்பம், மாத்ஸர்யம், காம்ய கர்மங்களை அநுஷ்டிப்பது ஆகிய இவைகள் நடக்கும். எந்தக் காலத்தில் கபடம், பொய், சோம்பல், தூக்கம், ஹிம்சை, துக்கம், பயம், தைன்யம் இவைகள் ஏற்படுகின்றனவோ, அது தமோகுணத்தைப் பிரதானமாகக்கொண்ட கலியுகமெனப்படுகிறது. அந்தக் கலி யுகத்தில் ஜனங்கள் மந்தபுத்தியுள்ளவர்களாகவும், அற்ப பாக்கியமுள்ளவர்களாகவும், அதிகமாகச் சாப்பிடுகிறவர்களாகவும், காமவெறி கொண்டவர்களாகவும், தரித்திரர்களாகவும் இருப்பார்கள். ஸ்திரீகள் பதிவிருதா தர்மமற்றவர்களாகவும், வியபிசாரிணிகளாகவு மிருப்பார்கள். தேசங்களில் பெரும்பாலும் திருடர்கள் மிகுதியாக இருப்பார்கள். பாஷண்டர்களால் வேத

பார்க்கம் கெடுக்கப்படும். அரசர்கள் பிரஜைகளைப் பட்சிப்பார்கள். (ஜனங்களிடத்தில் அதிகமாக வரி வாங்குவது முதலியவையால் உபத்திரவிப்பார்களென்று கருத்து.) பிராம்மணர்கள் சிச்னம், வயிறு ஆகிய இவைகளைத் திருப்தி செய்வதில் நோக்கமுள்ளவர்களாகஇருப்பார்கள். பிரம்மசாரிகள் வேதத்தில் சொல்லிய ஆசாரமற்றவர்களாகவும், அசுத்தர்களாகவுமிருப்பார்கள். கிருகஸ்தர்கள் பிட்சை வாங்குவதில் நோக்கமுள்ளவர்களாகவே யிருப்பார்கள். (பிறருக்குப் பிட்சையளிக்கமாட்டார்களென்று கருத்து.) வானப்பிரஸ்தர்கள் கிராமத்திலேயே வசிப்பார்கள். சன்னியாசிகள் பணத்திலேயே மிக்க ஆசைகொண்டவர்களாக இருப்பார்கள். ஸ்திரீகள் குட்டையான சரீரமுள்ளவர்களாகவும், அதிக ஆகாரமுள்ளவர்களாகவும், அதிகப் பிரஜைகளுள்ளவர்களாகவும், திருட்டுத்தனம், மாயை, பிடிவாதம் இவைகளுள்ளவர்களாகவுமிருப்பார்கள். ஜனங்கள் ஆபத்தில்லாத காலத்திலும் அவரவர்களுடைய விருத்தியைவிட்டு வியாபாரஞ்செய்ய ஆரம்பிப்பார்கள். அதிலும் வெறுக்கக்கூடியவைகளை விற்பார்கள். (உப்பு, எண்ணெய், நெய், மாமிசம் முதலியவைகளை) அதிலும் கபடத்தையே கைக்கொள்வார்கள். வேலைக்காரர்கள் தங்களுடைய யஜமானன் எவ்வளவு சிறந்தவனானாலும் பணமில்லாவிடில் அவனை விட்டுவிடுவார்கள். வேலைசெய்யச் சக்தியற்ற வேலைக்காரர்களை வம்சபரம்பரையாக இருந்தவர்களானாலும் யஜமானர்கள் விட்டுவிடுவார்கள். கறவையில்லாத பசுக்களை ஜனங்கள் சம்ரட்சிக்கமாட்டார்கள். மேலும் ஜனங்கள் மனைவியினிடத்தில் ஆசைகொண்டு அவளுடைய பந்துக்களான மைத்துனன், மனைவியின் சகோதரி முதலியவர்களுடன் பேசிக்கொண்டு அவர்களிடத்தில் பிரியம் வைப்பார்கள். தங்களுடைய தந்தை, சகோதரர்கள், சகோதரிகள், ஞாதிகள் இவர்களிடத்தில் பிரியப்

படமாட்டார்கள். சூத்திரர்கள் தபஸ்விகளின் வேடந் தரித்து ஜீவிப்பதுமன்றி மேலான ஆசனத்திலிருந்து தர்மத்தை உபதேசிப்பார்கள். காலத்தில் மழைபெய்யாமல் அடிக்கடி தேசத்தில் க்ஷாமமுண்டாகும். அதனால் அன்னங் கிடைக்காமல் ஜனங்கள் கஷ்டப்பட்டு நடுங்குவார்கள். நல்ல வஸ்திரம், அன்னம், பானம், படுக்கை, ஸ்திரீபோகம், ஸ்நானம், ஆபரணம் ஆகிய இவைகளில்லாமல் பிசாசங்கள்போல் ஜனங்கள் காணப்படுவார்கள். மேலும், கலியுகத்தில் ஒரு காகணிக்காக (20-சோழி கொண்ட நாணயம்) ஸ்நேகத்தை விட்டுச் சண்டை செய்வதுடன் பிராணனையும் விடுவார்கள். வயது முதிர்ந்த தாய் தந்தையர்களைக் காப்பாற்றமாட்டார்கள். குழந்தைகளைத் தந்தை ரட்சிக்கமாட்டான். தன் வயிற்றை நிரப்பிக்கொள்வதிலும் ஸ்திரீ சுகத்திலுமே நோக்கமுள்ளவர்களாக இருப்பார்கள். மேலும், எல்லா ஜனங்களும் பாஷண்டர்களுடைய மதத்தால் மனம் கலங்கினவர்களாகி எல்லா உலகங்களுக்கும் குருவும், பிரம்மா முதலியவர்களால் நமஸ்கரிக்கப்பெற்ற தாமரைபோன்ற பாதங்களுள்ளவரும், நித்யருமான ஸ்ரீமஹாவிஷ்ணுவைப் பெரும் பலரும் பூஜிக்கமாட்டார்கள். வியாதியால் பீடிக்கப்பட்டவனுனும் இறக்குந் தருணத்திலிருப்பவனானாலும், தடுக்கிப் பூமியில் விழுந்தவனானாலும் அவனுக் பகவானுடைய திவ்ய நாமங்களை உச்சரித்தானாகில் சகல கர்ம பந்தங்களற்றவனாகி உத்தம கதியை அடைவான். புருஷோத்தமராகிய ஸ்ரீபகவானை எப்பொழுதும் மனத்தில் வைத்துக்கொண்டிருந்தால் (தியானஞ் செய்தால்) திரவ்யம், தேசம், இந்திரியங்கள், கலி காலம் இவைகளாலுண்டாகும் தோஷங்கள் யாவும் நிவர்த்தியாகும். பகவானுடைய கதையைக் கேட்டாலும், திவ்ய நாமங்களை யுச்சரித்தாலும், அவருடைய மூர்த்தியைத் தியானஞ்செய்தாலும், பிரதிமைகளைப் பூஜித்தாலும், அவரிடம் பக்திசெய்தாலும், இருதயத்தில் எப்

பொழுதும் வைத்துக்கொண்டிருந்தாலும் அநேக ஜன்மங்களில் செய்யப்பட்ட பாபங்கள் நிவர்த்தியாகும். மற்ற உலகத்தின் சம்பந்தத்தால் ஏற்பட்ட சுவர்ணத்தின் மலமானது அக்னியின் சம்பந்தத்தால் நீக்கப்படுவதுபோல் இருதயத்திலிருக்கும் பகவான் அசுத்தமான சித்தத்தைச் சுத்தமாகச் செய்கிறார். (வேறொன்றும் முதலியவையாவில்லையென்று கருத்து.) அனந்தராகிய பகவான் இருதயத்திலிருப்பதால் எவ்வளவு பரிசுத்தி ஏற்படுகிறதோ, அவ்வளவு சுத்தி, வித்தை (தேவதோபாஸ்தி), தவம், பிராணாயாமம், சகல பிரஜைகளிடம் அனுதாபப்படுவது, புண்ய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்வது, தானம், மந்திர ஜபம் இவைகளால் உண்டாகிறதில்லை. ஆனதால் ஓ மகாராஜா! நீர் மரண தருணத்திலுள்ளவராகையால் எல்லா முயற்சியாலும் ஸ்ரீ மகாவிஷ்ணுவை இருதயத்தில் வைத்துக்கொள்ளும். பாபங்களைப் போக்கக்கூடிய பகவானை இருதயத்தில் மரணமடைபவர்கள் தியானிப்பார்களாகில், எல்லாவற்றையும் படைப்பவரும், எல்லா உலகசுருபியுமான பகவான் அவர்களைத் தம்முடைய ஸ்வரூபமாகச் செய்கிறார். ஓ மகாராஜா! கலியுகம் தோஷங்களுக்கு நிதியாயினும் அதனிடத்தில் பெரிதாகிய குணமொன்றிருக்கிறது. ஸ்ரீ கிருஷ்ணனுடைய திவ்ய நாமங்களை உச்சரிப்பதாலேயே சகல பந்தங்களற்றவனாகி உத்தம கதியை அடைகிறான். கிருத யுகத்தில் ஸ்ரீபகவானைத் தியானஞ்செய்தும், திரேதாயுகத்தில் யாகங்களைச் செய்து பூஜித்தும், துவாபர யுகத்தில் பகவானுக்குச் சிசுருஷைசெய்தும் ஜனங்கள் எந்தப் பயனை அடைந்தார்களோ, அதனைக் கலியுகத்தில் பகவானுடைய திவ்ய நாமங்களை உச்சரிப்பதாலேயே அடைவார்கள்.

# அத்தியாயம் 4

## நைமித்திகம் முதலிய லயங்கள்

**1—22.** ஓ மகாராஜ ! பரமாணு முதலாக இரண்டு பரார்த்தம் வரையிலுள்ள காலத்தின் அளவைச் சொன்னேன். யுகங்களின் அளவும் சொல்லப்பட்டது. இனி, கல்பம் பிரளயம் இவைகளைப்பற்றிச் சொல்லுகிறேன், கேளும். சதுர்யுகத்தில் ஆயிரங்கொண்டது பிரம்மதேவருக்கு ஒரு பகலாகும். அதனைக் கல்பமென்று சொல்லுகிறோம். அதில் பதினான்கு மநுக்கள் உண்டு. அதன்பின் அவ்வளவு காலம் பிரம்மதேவருடைய இராத்திரி. அந்தக் காலமே பிரளய மெனப்படுகிறது. அந்தச் சமயத்தில் இந்த மூன்று உலகங்களும் லயத்தை அடைகின்றன. (காரண சுரூபங்களாக இருக்கின்றன.) ஜகத்தைப் படைத்தவரான ஸ்ரீமந் நாராயணன் ஆதிசேஷனாகிய படுக்கையில் படுத்துப் பிரம்மதேவருடன் சகல ஜகத்தைக் காரணசுரூபமாகச் செய்து தம்மிடத்தில் உபசங்கரித்து வைத்துக்கொண்டு அந்தக் காலத்தில் தூங்குகிறார். ஆனதுபற்றி இது நைமித்திகப் பிரளய மெனப்படுகிறது. பிரம்மதேவருடைய ஆயுளாகிய இரண்டு பரார்த்தஞ் சென்றபின் ஏழு பிரகிருதிகளும் (மகத் அகங்காரம் ஐந்து தன் மாத்திரைகள்) லயத்தை அடைகின்றன. பிரகிருதியின் காரியமான அண்டகோசத்திற்கு நாசம் காலத்தால் நேர்ந்தபோது ஏற்படும் லயம் பிராகிருதிகமெனப்படுகிறது. (பிரகிருதியின் லயத்தாலேற்பட்டதென்று கருத்து) அப்பொழுது நூறு வருஷ காலம் மழை பெய்யாமலிருக்கும். அப்பொழுது ஜனங்கள் அன்னமில்லாமல் பசியால் உபத்திரவிக்கப்பெற்று ஒருவரையொருவர் புசித்துக்கொண்டு முறையே நாசமடைவார்கள். அப்பொழுது சமுத்திரம், தேகம், பூமி இவைகளிலிருக்கும் ரசமானது அக்காலத்திய சூரியனுடைய

கடுமையான வெயிலால் இரசிக்கப்படும் (வரண்டுபோகும்). இப்படி சூரியன் ரசத்தைக் இரகிப்பாரேயொழிய மழை பெய்யச் செய்வதில்லை. பின்பு சங்கர்ஷணருடைய முகத்திலிருந்து அக்னி வெளிப்படும். அது அக்காலத்திய காற்றினால் தூண்டப் பட்டுப் பாதாலம் முதலிய பிலங்களையும் எரிக்கும். மேல் சூரிய கிரணங்களாலும் கீழ் அக்னி ஜ்வாலைகளாலும் தகிக்கப்பெற்று அண்டமானது எரிக்கப்பட்ட சாணத்தின் உண்டைபோலக் காணப் படும். அதன்பின் நூறு வருஷங்களுக்குமேல் பிரளயகாலத்துக் காற்று மிகவும் கடுமையாக வீசும். அப்பொழுது ஆகாயம் தூளியால் மறைக்கப்பெற்று அழுக்குள்ளதாக இருக்கும். அதன்பிறகு பல வர்ணமுள்ள மேகங்கள் கூட்டமாகக் கடுமை யாகச் சப்தித்துக்கொண்டு நூறு வருஷகாலம் மழை பெய்யும். பிரம்மாண்டத்திற்குட்பட்ட ஜகத் முழுவதும் ஒரே ஜலமாக இருக்கும். அப்பொழுது பூமியின் கந்தமாகிய குணத்தை ஜலம் வாங்கிக்கொள்ளுகிறது (பூமி ஜலத்தில் லயிக்கிறது). கந்தமற்ற பிருதிவி நாசத்தை அடைகிறது. ஜலத்தின் ரசத்தை தேஜஸ் வாங்கிக்கொள்ளுகிறது. தேஜஸ்ஸில் ரசமற்ற ஜலம் லயிக்கிறது. தேஜஸ்ஸின் குணமாகிய ரூபத்தை வாயு அபகரிக் கிறது. ரூபமற்ற தேஜஸ் வாயுவில் லயிக்கிறது. வாயுவின் குணமாகிய ஸ்பரிசத்தை ஆகாசம் கிரகித்துக்கொள்ளுகிறது. ஸ்பரிசமற்ற வாயு ஆகாசத்தில் லயிக்கிறது. ஆகாசத்தின் குண மான சப்தத்தை அகங்காரம் அபகரிக்கிறது. சப்தமற்ற ஆகாயம் அகங்காரத்தில் லயிக்கிறது. தைஜசங்களான இந்திரியங்களையும், சாத்விகாகங்காரத்திலுண்டான தேவர்களையும், அவைகளுடைய விருத்திகளையும், தாமசாகங்காரத்தையும் மகத் தத்துவம் அபகரிக்கிறது. அந்த மகத் தத்துவம் சத்துவம் முதலிய குணங்களில் லயிக்கிறது. எல்லாவற்றிற்கும் காரணமாகிய பிரதானம் காலத்தால் தூண்டப்பட்டுக் குணங்களைத் தன்னிடம்

உபசங்கரிக்கப்படுகின்றனஒன்றுகிறது. அதற்குக் காலத்தின் அவயவங்களான இரவு, பகல் முதலியவையால் பரிணமம் முதலிய விகாரங்களில்லை ; அதற்கு ஆதியில்லை ; அந்தமில்லை ; மேலும் அது இருக்கிறது என்றது முதலிய விகாரமற்றது; எப்பொழுதும் ஒரேவகையாக இருப்பது; நித்யமானது; குறைவற்றது; எல்லாவற்றிற்கும் காரணமாக இருப்பது ; பின்னும் மனத்திற்கு எட்டாதது ; வாக்குக்கு விஷயமானதல்ல ; சத்துவம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களுக்கு விஷயமல்ல; மகத் தத்துவம் முதலியவைகளுக்கும் விஷயமல்ல ; பிராணன், புத்தி, இந்திரியங்கள், அவைகளுக்கு அதிஷ்டான தேவதைகள் ஆகிய இவைகளுக்கும் விஷயமல்ல ; ஒன்றுக்கும் விஷயமாகாத (புலப்படாத) வஸ்துவிற்கு லௌகிகமான விகாரங்கள் ஏற்படுமா? (இல்லையென்று கருத்து.) மேலும் அந்த வஸ்துவிற்கு ஜாக்கிரதவஸ்தையாவது, சொப்பனவஸ்தையாவது, சுஷுப்தியாவது இல்லை. மேலும் அது ஆகாயம், ஜலம், பூமி, அக்னி, வாயு, சூரியன் ஆகிய இவைகளுடைய சம்பந்தமற்றது; ஆனால் (இந்திரியம் முதலியவைகளில்லாததால்) சுஷுப்திபோலும், சூனியம்போலும் இன்னதென்று ஊகிக்கமுடியாததும், எல்லாவற்றிற்கும் காரணமுமான பதமென்று அதைச் சொல்லுகிறார்கள். புருஷன், அவ்யக்தம் இவைகளுடைய சக்திகளான சத்துவம் முதலியவைகள் காலத்தின் மகிமையால் அவசங்களாகி எப்பொழுது லயிக்கின்றனவோ, அப்பொழுது பிராகிருதிக லயமெனப்படுகிறது.

23—34. ஞானம் ஒன்றேயானாலும் அது புத்தி, இந்திரியம், அதன் விஷயம் ஆகிய இம்மூன்று வகையாகப் பிரகாசிக்கிறது. புலப்படும் ஜகத்தானது காரணத்தைக்காட்டிலும் வேறல்ல. எதற்கு ஆதியும், அந்தமுமிருக்கிறதோ, அது வஸ்துவல்ல. (ஜகத் இல்லை; காணப்படுவதால் காரணத்தைக்

காட்டிலும் ஒருகாலுமில்லாமலிருப்பதால் ஆதி அந்தம் இவைக ளுடையதாகவிருப்பதால் என்ற அநுமானத்தால் பிரபஞ்சம் அவஸ்துவென்று ஏற்படுகிறது.) தீபம், சக்ஷுஸ், ரூபம் ஆகிய இவைகள் தேஜஸ்ஸின் அம்சங்களேயாம். ஆனதால் தேஜஸ் ஸைக் காட்டிலும் வேறல்ல. அதுபோலவே புத்தி, இந்திரி யங்கள், விஷயங்கள் ஆகிய இவைகள் தங்களில் ஒன்றாகிய பரப்பிரம்மத்தைக் காட்டிலும் வேறல்ல. ஜாக்ரம், சொப்பனம், சுஷுப்தியென்ற அவஸ்தைகள் புத்தியினுடையவை என்று சொல்லுகிறோமல்லவா ? அதுவும் எப்படிப் பொய்யானதோ, அதுபோல. பரமாத்மாவிடத்தில் பல வகையாகத் தோற்று வதும் மாயையேயாம். ஆகாயத்தில் மேகங்கள் எப்படிச் சில காலமிருக்கின்றன ; சில காலமில்லையோ, அப்படி பிரம்மத்தி லிடம் இந்தப் பிரபஞ்சமிருக்கிறது. (எது அவயவங்களுள்ளதோ, அது ஆதியந்தமுள்ளது. பிரபஞ்சம் ஆதியந்தமுள்ளதானதால் இல்லையென்று கருத்து. உண்டாவதும் நசிப்பதுமாக இருப்ப தால் பிரபஞ்சம் மித்யை. பிரபஞ்சமில்லாத காலத்திலும் எது இருக்கிறதோ அதுவே சத்யமானது. கயிற்றைப் பார்த்துச் சர்ப்பமென்று நினைப்பதுபோல் என்று கருத்து) அவயவங்கள் உள்ள எல்லா வஸ்துக்களுக்கும் (அவயவிகளுக்கும்) அவயவமே சத்தியமானது. அவயவியைவிட்டு அவயவம் தனியாகப் பிரகா சிக்கும். அவயவத்தை விட்டு அவயவி தனியாகப் பிரகாசிக் கிறதில்லை. வஸ்திரத்தின் அவயவமான நூலைத் தனியாகப் பிரித்தெடுக்கலாம். நூலை விட்டுத் தனியாக வஸ்திரமிருக்க முடியாதல்லவா ? (பிரபஞ்சம் காரியம், பிரம்மம் காரணம் என்று சொல்லுகிறீர்கள். காரியமாகிய பிரபஞ்சம் மித்யை என்றால் பிரம்மத்தைக் காரணமென்றுதான் எப்படிச் சொல்லக் கூடும் என்றால் பிரம்மத்தினிடத்தில் காரணத்வமும் சத்திய மல்லவென்று அடுத்த சுலோகத்தால் காட்டப்படுகிறது.) உலகத்

தில் சில, காரணங்களாகவும் காணப்படுகின்றன. அது பிராந்தியேயாம். காரிய காரணங்கள் ஒன்றையொன்று அபேக்ஷிக்கிறதால் எல்லாம் ஆதி அந்தம் இவைகளுள்ளவைகளாக இருக்கின்றன. ஆனதால் அவை வஸ்துக்களல்ல. காரியமென்று ஒன்றிருந்தால் காரணமென்பது ஏற்படும். ஆனதால் காரியமென்பதும் மற்றொன்றை அபேக்ஷித்ததே. ஒரு வஸ்து ஒன்றை உத்தேசித்துக் காரணமாகவும், மற்றொன்றை உத்தேசித்துக் காரியமாகவும் ஆகிறது. ஆனதால் காரியமென்பதும் காரணமென்பதும் நியதமல்ல. உற்பத்தி நாசமுள்ளது. மேற்காட்டியவண்ணம் காரியத்துவம் (காரியமாகவிருக்கும் தன்மை) முதலியவை சத்தியங்களல்லவானதால் பிரக்ருதியினிடத்தில் காரணத்துவமுமில்லையென்று காட்டப்பட்டது. மேற்காட்டிய யுக்திகளால் பிரபஞ்சம் மித்யை என்று தெரிய வருகிறது. ஆனாலும் பிரபஞ்சம் தோன்றுகிறதே, அதனை மித்யையென்று எப்படிச் சொல்லலாமென்றால், பிரபஞ்சம் இருப்பதாகத் தோன்றினாலும் பரமாத்மாவின் பிரகாசத்தைக் காட்டிலும் கொஞ்சமாவது வேறாகப் பிரகாசிப்பதாகச் சொல்ல முடியவில்லை. அப்படி வேறாகப் பிரகாசிக்குமானால் ஆத்மாவைப்போல் பிரபஞ்சமும் வஸ்துவென்று சொல்லக்கூடும். (அப்படியில்லையென்று கருத்து) ஆத்மா சத்தியமானாலும் ஜீவாத்மா, பரமாத்மாவென்ற பேதமிருக்கிறதேயென்றால் சத்தியமாகிய ஆத்மாவிடத்தில் பேதமேயில்லை. பேதமிருப்பதாக நினைப்பது மூடத்தனம், ஆகாசம் உபாதி சம்பந்தத்தால் கடாகாசம் முதலிய வியவகாரத்தை அடைந்தாலும் உண்மையில் எப்படி பேதமற்றதோ, அப்படி சரீரம் முதலிய உபாதி சம்பந்தத்தால் ஜீவனென்று வியவகாரமேற்படுகிறதேயொழிய உண்மையில் ஆத்மா ஒன்றேயாம் (ஒன்றிலும் அடங்கியதல்ல என்பது ஆகாச திருஷ்டாந்தத்தால் காட்டப்பட்டது). ஆகாயத்தி

துள்ள சூரியன் ஜலத்தில் தோன்றும்பொழுது அந்தப் பிம்பப் பிரதிபிம்பங்கள் உபாதிசம்பந்தத்தால் வேறுபோல் தோன்றி னாலும் உண்மையில் எப்படி ஒன்றே, உபாதியாலேற்படும் அசைவு முதலிய விகாரத்தை அடைகிறதில்லையோ, அப்படி ஆத்மா உபாதி சம்பந்தத்தால் பேதத்தையாவது விகாரத்தை யாவது அடைகிறதில்லை. சரீரத்திற்குள்ளிருக்கும் வாயு பிராண னென்றும், வெளியிலிருப்பது வாயுவென்றும் வியவகரிக்கப் பட்டாலும் உண்மையில் எப்படி அவ்விரண்டிற்கும் பேதமில் லையோ, அப்படி ஜீவனுக்கும், பரமாத்மாவிற்கும் உண்மையில் பேதமில்லை. (கிரியாபேதத்திற்காக வாயு உதாகரணமாகச் சொல்லப்பட்டது) சுவர்ணத்தை ஜனங்கள் பலவகையான ஆபரணங்களாகச் செய்து, அவைகளுக்குப் பலவகையான பெயர்களைக் கற்பித்து, எப்படிப் பலவகையாக வியவகரிக்கிறார் களோ, அப்படி பரமாத்மாவை ஜனங்கள் லௌகிக வார்த்தை களாலும், வைதிக வார்த்தைகளாலும் பலவகையாகச் சொல்லு கிறார்கள். (தங்கம், கடுக்கன், வளை முதலிய பெயர்களால் வியவ கரிக்கப்பெற்றாலும் உண்மையில் எப்படி சுவர்ணமாகவே யிருக் கிறதோ, அப்படி எல்லா வியவகாரத்திற்கும் பகவானே ஆசிரய மென்று கருத்து.) அகங்காரம் பிரம்மத்தின் காரியமல்லவா ? தனக்குக் காரணமாகிய பிரம்மத்தை மறைக்கும் சக்தி அகங்கா ரத்துக்கு ஏற்படக்கூடுமா ? அப்படி ஏற்படுமானால் அகங்காரமும் மறைக்கப்படவேண்டுமேயென்றால், சூரியனால் உண்டுபண்ணப் பட்ட மேகங்கள் சூரியனாலேயே பிரகாசிக்கப்பெற்று சூரியனையே மறைக்கின்றனவல்லவா ? அதுபோலப் பிரம்மத்தால் உண்டு பண்ணப்பட்ட அகங்காரம் அவராலேயே பிரகாசிக்கப்பெற்று ஆத்மப்பிரகாசத்தை மறைக்கின்றது. (அக்னியில் போடப்பெற்ற ஆகுதியானது சூரியனை அடைகிறது. சூரியனிடமாக மழை உண்டாகிறது. மழையால் அன்னமுண்டாகிறது. அதனால்

பிரஜைகள் விருத்தியடைகிறார்கள்—சுருதி) சூரியனும் உண்டான மேகத்தின் மறைவு எப்பொழுது விலகுகிறதோ, அப்போது சட்சுசானது தன்னுடைய சுருபமாகிய சூரியனைக் காண்கிறது. அதுபோலவே ஆத்மவிசாரத்தால் அகங்காரம் நிவர்த்தியான பின் நானே பிரம்மம் என்று நினைக்கிறான். எப்பொழுது மேற்காட்டியபடி விவேகமாகிய ஆயுதத்தால் மாயாமயமாகிய அகங்காரமாகிய கட்டையை வெட்டிப் பரிபூர்ணமான ஆத்மாவாக இருக்கிறானோ, அதை ஆத்தியந்திகப் பிரளயமென்கிறார்கள்.

35—43. பிரம்மா முதலிய எல்லாப் பிராணிகளுக்கும் எப்பொழுதும் உற்பத்தி, பிரளயம் இவைகளுண்டென்று சூட்சம திருஷ்டியுள்ளவர்கள் சொல்லுகிறார்கள். காலமாகிய நதி வேகத்தால் இழுக்கப்படும் சரீரம் முதலிய அவஸ்தைகள் உற்பத்திக்கும் பிரளயத்திற்கும் காரணங்களாக இருக்கின்றன. (ஆற்றில் ஜலம் பிரவகிக்கும்பொழுது பிரவாகம் ஒவ்வொரு க்ஷணத்திலும் எப்படிப் புதிதோ, தீபச்சுவாலை எப்படி ஒவ்வொரு க்ஷணத்திலும் புதிதோ, அப்படி சரீரங்களும் ஒவ்வொரு க்ஷணத்திலும் புதிது. ஆனதால் ஒவ்வொரு க்ஷணமும் சரீரம் நசிக்கிறதென்று கருத்து.) ஆனால் ஆகாசத்தில் சூரியன், சந்திரன் முதலியவை எப்பொழுதும் சென்றுகொண்டிருந்தாலும் அவைகளின் கதி (நடை) எப்படி ஜனங்களுக்குத் தெரியவில்லையோ அப்படி ஆதி, அந்தம் இவைகளற்றதும், ஈசுவர சுருபமான காலத்தாலுண்டாகும் அவஸ்தைகள் சாமானிய ஜனங்களுக்குத் தெரியவில்லை. (பால்யம் முதலிய அவஸ்தைகள் காணப்படுவதால் அதன் மத்தியிலும் அவஸ்தைகள் உண்டென்று தெரிந்துகொள்ளவேண்டுமென்று கருத்து.) மேற்காட்டியவண்ணம் நித்யம், நைமித்திகம், பிராகிருதிகம், ஆத்யந்திகம் என்று பிரளயம் நான்குவகையாக இருக்கிறது. காலத்தின் கதி இம்மாதிரியாக இருக்கிறது. குருக்களில் சிறந்த

ஓ பரீக்ஷித்தே! சகல உலகத்தைப் படைத்து அதைத் தம்முடைய தேஜஸ்ஸால் காப்பாற்றுகிறவரான ஸ்ரீமந் நாராயணனுடைய லீலா விஷயமான கதைகளைச் சுருக்கமாகச் சொன்னேன். முழுமையும் சொல்வதற்குப் பிரம்மதேவராலும் முடியாது. பலவகையான துக்கமாகிய காட்டுத்தீயினால் உபத்திரவிக்கப் பெற்று, தாண்டமுடியாத சம்சார சமுத்திரத்தைக் கடக்க விரும்பும் புருஷனுக்குப் புருஷோத்தமராகிய பகவானுடைய கதையைக் கேட்பது, சொல்வது முதலியவைகளைத் தவிர வேறு கப்பலில்லை. இந்தப் புராண சம்ஹிதையை முந்தி நாராயண மகரிஷி நாரதருக்கு உபதேசித்தார். அவர் வியாசருக்கு உபதேசித்தார். ஓ மிக்க அதிருஷ்டமுள்ளவரே! அந்த வியாச பகவான் வேதத்திற்குச் சமமான இந்த சம்ஹிதையை எனக்கு உபதேசித்தார். இனி, நைமிசாரண்யத்தில் மகரிஷிகள் தீர்க்க சத்திரஞ் செய்யும்பொழுது சௌனகர் முதலியவர்களால் கேட்கப்பெற்று சூதர் இந்த சம்ஹிதையை மகரிஷிகளுக்குச் சொல்வார்" என்றார்.

---

## அத்தியாயம் 5

### அரசனுக்கு சுகர் பிரும்ம சுரூபத்தைச் சுருக்கமாகச் சொன்னது

இந்தப் புராணத்தில் சகல உலக சுரூபியான ஸ்ரீமந் நாராயணன் அடிக்கடி வர்ணிக்கப்படுகிறார். அவருடைய சந்தோஷத்திலிருந்து பிரம்மதேவர் உண்டானார். கோபத்திலிருந்து ருத்திரன் உண்டானார். ஓ பரீக்ஷித்தே! 'நான் மரண மடையப்போகிறேன்' என்ற அற்ப புத்தியை விட்டுவிடும். நீர் முந்தியில்லாமல் புதிதாக உண்டானவர் அல்லை. இந்தச் சரீரம் போல நாசத்தையடையப்போகிறதுமில்லை. பிதாவே புத்திரனாக ஜனிக்கிறான் என்று வேதத்தில் பீஜாங்குர நியாயமாகச் சொல்லப்பட்டிருந்தாலும், சரீரம் உண்டாகிறது என்று அதற்குத்

தாத்பர்யமேயொழிய ஆத்மா ஜனிக்கிறதில்லை. கட்டையைக் காட்டிலும் அக்னி வேறாக இருக்கிறதுபோல தேகம் முதலியவை களைக் காட்டிலும் ஆத்மா விலக்ஷணன் என்று தெரிந்துகொள்ள வேண்டும். சொப்பனத்தில் தன்னுடைய தலை வெட்டப்படுவ தாகவும், தான் மரணத்தை யடைவதாகவும் தானே பார்க்கிரு னல்லவா ? அதனால் மரணம் முதலியவைகள் சரீரத்திற்கே யொழிய ஆத்மா ஜனிக்கவுமில்லை; மரணமடையவுமில்லை. குடம் உடைந்துபோனால் அதை உபாதியாய்க்கொண்ட ஆகாசம் முன்போல் எப்படி ஆகாசமாக இருக்கிறதோ, அதுபோலச் சரீரம் நாசத்தை அடைந்தால் ஜீவன் பிரம்மமாக ஆகிருன். மன மானது தேகம், குணம், கர்மம் இவைகளை உண்டுபண்ணுகிறது. அந்த மனத்தை மாயை உண்டுபண்ணுகிறது. அதனால் ஜீவ னுக்கு சம்சாரமேற்படுகிறது. எண்ணெய், திரி, அக்னியின் சேர்க்கை இவைகள் எதுவரையிலிருக்குமோ அதுவரையில் தீபமாக இருக்கும். அதுபோல் கர்மா, மனம், தேகம், சைதன்யம் இவைகள் சேருவதாலேயே சம்சாரம் உண்டா கிறது. (கர்மம் எண்ணெய்போலும், அதற்கு அதிஷ்டான மாகிய தீபம்போல் மனதும், திரிபோல் தேகமும், அக்னியின் சேர்க்கைபோல் சைதன்யத்தின் அத்தியாசமும், தீபச்சுவாலை போல சம்சாரமென்றும் காட்டப்பட்டது.) மேற்காட்டிய சம்சாரம் ரஜஸ், சத்வம், தமஸ் இவைகளின் விருத்தியால் உண்டாகிறது ; வளர்கிறது ; முறையே நசிக்கிறது. ஆனதால் சம்சாரம் நசிக் கிறதேயொழிய ஆத்மாவிற்கு ஒருபொழுதும் நாசமில்லை. ஸ்தூல சூக்ஷ்ம தேகங்களைக் காட்டிலும் ஆத்மா விலக்ஷணர் ; சுயமாகப் பிரகாசிப்பவர் ; எல்லாவற்றிற்கும் ஆகாசம்போல ஆதாரமாக இருப்பவர் ; விகாரமற்றவர் ; நாசமற்றவர் ; ஒப்பற்றவர் ; எங்குமிருப்பவர் ; இப்படிப்பட்ட பரமாத்மா உம்முடைய தேகத்தி லிருப்பதாக அனுமானப் பிரமாணத்தைக் கவர்ந்த

புத்தியைக்கொண்டும், பகவானைத் தியானஞ் செய்வதாலும் தெரிந்துகொள்ளும். மிருத்யுக்களுக்கு மிருத்யுவான ஈசுவரனை மரணத்திற்குக் காரணங்களான சர்ப்பம் முதலியவைகள் உபத்திரவிக்கமாட்டா. ஆனதால் பிராம்மண சாபத்தால் தூண்டப்பட்ட தட்சகன் உம்மை எரிக்கமாட்டான். ஆனதால் நீர், நான் என்பது பிரம்மமேயாம். பிரம்மமென்பது எதுவோ, அதுவும் நானேயாம் என்று தம்மை உபாதியற்ற பரப்பிரம்மமாகத் தியானம் செய்யும். அந்தக் காலத்தில் உம்மைத் தவிர உலகம் வேறாக உமக்குத் தோன்றாதாகையால் உம்முடைய காலை நாக்கினால் நக்கிக் கடிக்கும் தட்சகனையாவது, உம்முடைய சரீரத்தையாவது நீர் பார்க்கமாட்டீர். ஓ மகாராஜ! உலக சுரூபியான பகவானுடைய லீலையைப்பற்றிக் கேட்டீரல்லவா? அதனைச் சொன்னேன். இன்னும் எதனைக் கேட்க விரும்புகிறீர்?" என்று சுகர் கேட்டார்.

# அத்தியாயம் 6

## பரீக்ஷித்து மோட்சத்தை அடைந்தது

1—8　உலக சுரூபியான ஸ்ரீ மகாவிஷ்ணுவை எப்பொழுதும் தம்முடைய இருதயத்தில் பார்த்துக்கொண்டிருப்பவரும், சமபுத்தியுள்ளவரும், வியாசருடைய புத்திரருமான சுகப் பிரம்மத்தால் சொல்லப்பட்ட இந்தப் புராணத்தைக் கேட்டுப் பரீக்ஷித்து மகாராஜன் அவருடைய பாதங்களைத் தம்முடைய தலையில் வைத்துக்கொண்டு சுகரை நோக்கி, "நான் சித்தனானேன். கருணையையே சுபாவமாகக்கொண்ட நீர் ஆதியந்தமில்லாதவரான நாராயணனுடைய கதையைச் சொல்லி என்னை அனுக்கிரகித்தீர். ஆனால் பகவத் பக்தர்கள் சம்சாரத்தில் கஷ்டப்படும் மூடர்களை அனுக்கிரகிப்பது அதிக ஆச்சரியமல்ல. உத்தம

சுலோகராகிய பகவானுடைய சரிதங்களை வர்ணிக்கும் இந்தப் புராண சம்ஹிதையை நீர் சொல்ல நான் கேட்டேன். ஓ பகவன்! தட்சகன் முதலிய மிருத்யுக்களிடமிருந்து நான் பயப்பட்டேன். பயமில்லாத பதமானது உம்மால் காண்பிக்கப்பட்டது. நான் பிரம்மமாக ஆனேன். நான் வாக்கு முதலிய எல்லா இந்திரியங்களையும் அடக்கி, சுத்தமான மனதைப் பகவானிடத்தில் பிரவேசிக்கச்செய்து பிராணனை விடப்போகிறேன். அனுமதி கொடுக்கவேண்டும். உம்மால் உபதேசிக்கப்பட்ட ஞானத்தாலும் விஞ்ஞானத்தாலும், அஞ்ஞானமும், அதன் வாசனைகளும் நாசமாயின. க்ஷேமத்தைக் கொடுக்கக்கூடிய பகவானுடைய பரமபதமானது உம்மால் எனக்குக் காண்பிக்கப்பட்டது" என்று சொன்னார். அதைக் கேட்ட சுகர் பரீக்ஷித்திற்கு அனுமதி கொடுத்து, அவரால் பூஜிக்கப்பெற்றுச் சன்னியாசிகளுடன் தமது இஷ்டப்படி சென்றார்.

9—15. அரசர்களுள் சிறந்தவரான பரீக்ஷித்தும தம்முடைய மனதைப் புத்தியுடன் ஆத்மாவில் செலுத்தி, பரமாத்மாவைத் தியானஞ்செய்து மரம்போல் அசையாமல் நின்றார். மேலுமவர் கங்கையின் கரையில் கிழக்கு நுனியாகத் தர்ப்பங்களைப் பரப்பி, அதில் வடக்கு முகமாக உட்கார்ந்து, ஒன்றிலும் ஆசையில்லாதவராக சம்சயங்களற்றவராகிப் பிரம்மசொரூபியாக இருந்தார். அப்பொழுது பிராம்மண சாபத்தால் தூண்டப்பட்டுத் தட்சகன் பரீக்ஷித்தைக் கடித்துக் கொல்லுவதற்காக வரும்பொழுது வழியில் ஒரு பிராம்மணனைக் கண்டான். அந்தப் பிராம்மணன் விஷ வைத்தியத்தில் தேர்ச்சியுடைந்தவன். பரீக்ஷித்து மகாராஜனுக்கு வைத்தியம் செய்து அவரிடமாகப் பொருள் சம்பாதிக்க விரும்பி வந்தான். அந்தப் பிராம்மணன் விஷவைத்தியத்தில் தேர்ச்சியடைந்தவன் என்பதைத் தட்சகன் தெரிந்துகொண்டு அவருக்கு இஷ்டமான பணத்தைக்

கொடுத்துத் திருப்பி அனுப்பிவிட்டுத் தான் பிராம்மண வேடங் கொண்டு பரீக்ஷித்தின் சமீபஞ் சென்று அவரைக் கடித்தான். அந்தத் தட்சகனுடைய விஷாக்னியினால் அரசனுடைய சரீரம் சாம்பலாயிற்று. அரசன் பிரம்மசுரூபியானார். அவனைக் கண்ணுற்ற ஜனங்கள் ஹா! ஹா! என்று உரக்கக் கத்தினார்கள். ஆகாயத்திலுள்ள தேவர்களும், பூமியிலுள்ள மனிதர்களும் ஆச்சரியத்தை யடைந்தார்கள். தேவதுந்துபிகள் முழக்கப் பட்டன. அப்சரசுகளும் பாடினார்கள். தேவர்களும் புஷ்பங் களை வர்ஷித்தார்கள்; "நல்லது நல்லது" என்று சொன்னார்கள்.

**16—35.** பின்பு பரீக்ஷித்தின் புத்திரராகிய ஜனமேஜய ரென்பவர் தம்முடைய பிதாவாகிய பரீக்ஷித்தைத் தட்சகன் கொன்றானென்ற விரோதத்தால் பிராம்மணர்களுடன் சர்ப்ப யாகஞ்செய்து அதில் அநேக சர்ப்பங்களை அக்னியில் ஹோமஞ் செய்தார். அப்பொழுது தட்சகன் பயந்து இந்திரனைச் சரண மடைந்தான். யஜமானனாகிய ஜனமேஜயர் பிராம்மணர்களை நோக்கி, "ஏன் தட்சகன் மாத்திரம் அக்னியில் விழவில்லை" என்று கேட்கப் பிராம்மணர்கள், "இந்திரனால் காப்பாற்றப் பட்டு இந்திரனிடத்தில் தட்சகனிருக்கிறான்" என்று பதில் சொன்னார்கள். அதைக் கேட்டு அரசன், "இந்திரனுடன் தட்சகனை அக்னியில் ஏன் தள்ளக்கூடாது?" என்றார். அதைக் கேட்ட பிராம்மணர்கள், "ஓ தட்சக! நீ தேவேந்திரனுடன் அக்னியில் விழக்கடவாய்" என்று அக்கினியில் ஹோமம் பண்ணி னார்கள். அந்தப் பிராம்மணர்களுடைய வார்த்தையால் இந்திரன் விமானத்துடனும் தட்சகனுடனும் தமது இருப்பிட மிருந்து ஜனமேஜயருடைய யாகசாலையில் அக்னியின் சமீபம் வந்தார். இப்படி ஆகாயத்திலிருந்து விமானத்துடனும், தட்சக னுடனும் அக்கினியில் விழுகின்ற தேவேந்திரனைக் கண்ணுற்ற

பிருகஸ்பதி பகவான் ஜனமேஜய மகாராஜனை நோக்கி, "ஓ மகாராஜ ! இந்தத் தட்சகன் அமிருதத்தைப் பானஞ்செய்தவன். அதனால் இவனுக்கு மரணமும் கிழத்தனமுமில்லை. ஆனதால் இவனைக் கொல்லுவதாக யத்தனிப்பது உசிதமில்லை. பிராணிகள் ஜீவித்திருப்பதும் நாசத்தையடைவதும் அவரவர்களுடைய கர்மத்தாலேயேயொழிய ஒருவனுலொருவன் ஜீவிப்பதென்பதும் ஒருவனையொருவன் கொல்லுவதென்பதுமில்லை. அப்படியே சுகதுக்கங்களும் அவரவர்களுடைய கர்மத்தாலேயே ஏற்படு கின்றன. பிராணிகள் சர்ப்பத்தாலும், திருடர்களாலும், அக்கினியாலும், ஜலத்தாலும், பசி, தாகம், வியாதி இவை களாலும் மரணத்தை யடைகிறார்களென்பதற்கு அவரவர்களு டைய பிராரப்த கர்மத்தின் பயனை அனுபவிக்கிறார்களென்றே அர்த்தம்கொள்ளவேண்டும். ஆனதால் இந்த சர்ப்ப யாகத்தை நிறுத்திவிடும். இதனால் குற்றஞ்செய்யாத அநேக சர்ப்பங்கள் எரிக்கப்பட்டன. அதுவும் அவைகளுடைய கர்மத்தால் ஏற்பட் டது (உம்மிடத்தில் தோஷமில்லையென்று தாத்பரியம்) என்று சொன்னார். அதைக் கேட்ட ஜனமேஜயர் பிருகஸ்பதியின் வார்த்தையில் கௌரவம் வைத்து சர்ப்ப யாகத்தை நிறுத்தி, பிருகஸ்பதியைப் பூஜித்தார். ஒன்றாலும் பாதிக்கப்படாததும், இப்படிப்பட்டதென்று எண்ணக்கமுடியாததுமாக இருப்பதே விஷ்ணு வின் மகாமாயை. விஷ்ணுவின் அம்சபூதர்களான பிராணி களே கோபம் முதலியவைகளை அடைந்து அந்த மாயையால் மோகிக்கிறார்கள். பிரம்மத்தை யறிந்த பெரியோர்களால் பிரம்மத்தின் சுரூபம் சொல்லப்படும்பொழுது இந்த மாயை யானது பிரகாசியாமல் பயந்ததுபோல மோகம் முதலியவை களைச் செய்யாமலிருக்கிறது. மாயையால் ஏற்படும் பலவிதமான விவாதங்கள் பரப்பிரம்மத்தினிடத்தில் சம்பந்திக்கிறதில்லை. பிரம்மம் காரியங்களை அதிக்கிரமித்தது. சங்கல்பம் விகல்ப

மென்ற விருத்தியுள்ள மனமும் பிரம்மத்தினிடத்திலில்லை. மேலும் கர்மமும், செய்கிறவனும், அவ்விரண்டினாலும் கிடைக்கும் பயனும், அம்மூன்றோடுகூடிய அகங்கார சுரூபியாகிய ஜீவனும் பிரும்மத்தி னிடமில்லை. அந்தப் பிரும்ம சுரூபமானது ஒன்றினாலும் பாதிக்கப்படுகிறதுமில்லை; ஒன்றையும் பாதிக்கிறதுமில்லை. ஆனதால் அகங்காரம் முதலியவைகளை யொழித்து, சாந்தியடையவேண்டும். பெரியோர்கள் அனாத்மாக்களை விட விரும்பியவர்களாகி, சரீரம் முதலியவைகளில் அபிமானத்தை யொழித்து இது ஆத்மாவல்ல, இது ஆத்மாவல்ல என்று ஒவ்வொன்றையும் விசாரித்துத் தள்ளி, எதனை நிச்சயித்து மனத்தில் ஸ்திரமாக வைத்துக்கொள்ளுகிறார்களோ, அதுவே விஷ்ணுவின் பரமபதம். மேலும், தேகத்தில் 'நான்' என்ற அபிமானமும், வீடு முதலியவைகளில், 'என்னுடையது' என்ற அபிமானமும் எவர்களுக்கு இல்லையோ, அவர்கள் விஷ்ணுவின் உத்தமமான பதத்தை அடைவார்கள். பிறர் வைதாலும் அதனைப் பொறுத்துக்கொள்ளவேண்டும். ஒருவனையும் அவமானஞ் செய்யக்கூடாது. இந்தச் சரீரத்திற்காக ஒருவரையும் விரோதித்துக்கொள்ளக்கூடாது. எந்தப் பகவானுடைய பாதாரவிந்தத்தைத் தியானஞ்செய்த மகிமையால் இந்தப் புராண சம்ஹிதையை நான் தெரிந்துகொண்டேனோ, அந்தப் பூரண ஞான சுரூபியான, ஸ்ரீ கிருஷ்ண பகவானை நமஸ்கரிக்கிறேன்' என்றார்.

36. அதனைக் கேட்ட சௌனகர் ஸூதரை நோக்கி, "வியாஸருடைய சிஷ்யர்களும் வேதாசாரியர்களுமான பைலர் முதலியவர்களால் வேதங்கள் எவ்வளவு விதமாகப் பிரிக்கப்பட்டன? அதனைச் சொல்லும்" என்று கேட்டார்.

37—60. அதனைக் கேட்ட ஸூதர் சௌனகரை நோக்கி, "பிரம்மா தவஞ் செய்யும்பொழுது அவருடைய ஹ்ருதயாகாசத்திலிருந்து ஒரு நாதமுண்டாயிற்று. இப்பொழுதுகூட நம்முடைய காதுகளை மூடிக்கொண்டால் ஒரு நாதம் கேட்கிறதல்லவா? அது தான் அது. அந்த நாதத்தை உபாஸித்து யோகிகள் அதிபூதம், அத்தியாத்மம், அதிதைவம் இவைகளாலுண்டாகிய தாபத்தை நிவர்த்தித்துக்கொண்டு மோக்ஷத்தை அடைகிறார்கள். அந்த நாதத்திலிருந்து மூன்று மாத்திரையுள்ள ஓங்காரமுண்டாயிற்று. அது தானாகவே இருதயத்தில் பிரகாசிப்பது; அது காரணமற்றது; பரமாத்மாவிற்கு அதே அடையாளமென்று சொல்லுகிறார்கள். இந்தச் சப்தத்தைச் சுரோத்திரம் முதலிய இந்திரியங்களில்லாத காலத்தில் எவர் கேட்கிறாரோ, அவரே பரமாத்மா. அந்த ஓங்காரத்தாலேயே பல வாக்குகள் பிரகாசிக்கின்றன. ஹ்ருதயாகாசத்தில் ஆத்மாவிடத்திலிருந்து அது பிரகாசிக்கிறது. அந்த ஓங்காரம் தனக்குக் காரணமாகிய பரப்ரம்மத்தை நேராகச் சொல்லுகின்ற சப்தமாக இருக்கிறது. மேலும் அது சகல மந்திரங்கள், உபநிஷத், வேதம் இவைகளுக்குக் காரணமானது; எப்பொழுதும் ஒரே மாதிரியாக உள்ளது. இந்த ஓங்காரத்தில் அகாரம், உகாரம், மகாரம் என்ற மூன்று அக்ஷரங்களிருக்கின்றன. அவைகளாலேயே சத்துவம் முதலிய மூன்று குணங்களும், ரிக், யஜுஸ், ஸாமம் இவைகளும், பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் இவைகளும், ஜாக்கிரத், சொப்பனம், ஸுஷுப்தி ஆகிய அவஸ்தைகளும் தரிக்கப்படுகின்றன. அந்த ஓங்காரத்தைக்கொண்டு பகவான் அந்தஸ்தம் (ய, ர, ல, வ), ஊஷ்மம் (ச, ஷ, ஸ, ஹ), ஸ்வரம் (உயிரெழுத்துக்கள்), ஸ்பர்சம் (ககாரம் முதல் மகாரம் வரையிலுள்ள மெய்யெழுத்துக்கள்), ஹ்ரஸ்வம், தீர்க்கம் முதலியவை (குறில், நெடில்) ஆகிய அக்ஷர சமூகங்களைப் படைத்தார்.

அதன்பின் நான்கு முகங்களால் நான்கு வேதங்களேயும், வியாஹ்ருதிகளேயும், ஹெளத்திரம் முதலியவைகளேயும் படைத்தார். பின்பு பிரும்மதேவர், மரீசி முதலிய தம்முடைய புத்திரர்களுக்கு மேற்காட்டிய வேதம் முதலியவைகளே உபதேசித்தார். தர்மத்தை உபதேசிப்பவர்களான அவர்கள் தங்கள் தங்கள் புத்திரர்களுக்கு உபதேசித்தார்கள். அந்த வேதங்கள் இப்படி சிஷ்ய பரம்பரையாக ஒவ்வொரு யுகத்திலும் வழங்கிவந்தன. துவாபர யுகத்தின் முடிவில் மகரிஷிகள் வேதத்தைப் பிரித்தார்கள். அந்தக் காலத்திய ஜனங்கள் ஆயுள், புத்தி இவைகளில் குறைந்தவர்களாயிருந்தபடியினுல் பகவான் மகரிஷிகளுடைய ஹ்ருதயத்திலிருந்து அவர்களேத் தூண்டி வேதங்களேப் பிரிக்கும்படி செய்தார். இந்த வைவஸ்வத மன்வந்தரத்திலும் பிரும்மா முதலிய தேவர்கள் தர்மத்தைக் காப்பாற்றும்பொருட்டு பகவானேக் கேட்டுக்கொண்டதால் சத்தியவதியினிடத்தில் பராசரருக்குப் புத்திரராக அவதரித்து வேதங்களே நான்கு வகையாகப் பிரித்தார். ரிக்கு, அதர்வா, யஜுஸ், ஸாமம் இவைகளுடைய மந்திரங்களே அந்தந்தப் பிரகரணத்திற்குத் தக்கவாறு நூலில் ரத்தினத்தைக் கோர்ப்பதுபோல நான்கு ஸம்ஹிதைகளே ஏற்படுத்திஞர். மிக்க புத்திமானுகிய அந்த வியாஸ பகவான் நான்கு சிஷ்யர்களே யழைத்து, ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு ஸம்ஹிதையை உபதேசித்தார். பைலரென்ற சிஷ்யருக்கு ரிக் ஸம்ஹிதையைக் கொடுத்தார். அதற்குப் பஹ்விருசமென்று பெயர் (அநேக ரிக்குக்களுள்ளது). வைசம்பாயன ரென்பவருக்கு யஜுஸ்ஸைக் கொடுத்தார். அதற்கு நிகதம் என்று பெயர் (எல்லாவற்றையுஞ் சேர்த்துச் சொல்லியிருப்பதால்). சந்தோகமென்று பெயருள்ள ஸாம ஸம்ஹிதையை ஜைமினிக்கு உபதேசித்தார். ஸுமந்து என்பவருக்கு ஆங்கிரஸமென்ற அதர்வ ஸம்ஹிதையை உபதேசித்

தார். பைலரென்பவர் தம்முடைய ரிக்வேதத்தை இரண்டாகப் பிரித்து, இந்திரப் பிரமிதி என்பவருக்கும் பாஷ்கலரென்பவருக்கும் உபதேசித்தார். பாஷ்கல ரென்பவர் தம்முடைய ஸம்ஹிதையை நான்காகப் பிரித்துப் போத்தியர், யாக்ஞவல்கியர், பராசரர், அக்னிமித்திரர் இவர்களுக்கு உபதேசித்தார். இந்திரப் பிரமிதி என்பவர் தம்முடைய ஸம்ஹிதையைத் தம்முடைய புத்திரரும், ரிஷியுமான மாண்டூகேயருக்கு உபதேசித்தார். அவருடைய சிஷ்யர் தேவமித்திரர் என்பவர் ஸௌபரி முதலியவர்களுக்குச் சொன்னார். மாண்டூகேயருடைய புத்திரராகிய சாகல்லியரென்பவர் தம்முடைய ஸம்ஹிதையை ஐந்தாகப் பிரித்து வாத்ஸ்யர், மௌத்கல்யர், சாலீயர், கோபில்லியர், சிசிரர் இவர்களுக்கு உபதேசித்தார். சாகல்யருடைய சிஷ்யராகிய ஜாதுகர்ணரென்பவர் தம்முடைய ஸம்ஹிதையை மூன்றுகப் பிரித்துப் பலாகர், பைங்கர், வைதாளர் இவர்களுக்கும், நிருக்தத்தை (வேதத்திலுள்ள பதங்களுக்கு வியாக்கியான ரூபமானதைச் செய்து) விரஜருக்குங் கொடுத்தார். மேற்சொல்லிய பாஷ்கலருடைய புத்திரராகிய பாஷ்கலி என்பவர் ஒவ்வொரு சாகைகளிலிருந்து வாலகில்யமென்ற ஸம்ஹிதையைச் செய்தார். பாலாயனி, கார்கி, காஸாரர் என்பவர்கள் அதனைக் கிரகித்துக்கொண்டார்கள். இம்மாதிரி பஹ்வ்ருச ஸம்ஹிதை மேற்காட்டிய பிரும்ம ரிஷிகளால் பிரித்து அத்தியயனஞ் செய்யப்பட்டது. இந்த மகரிஷிகளால் செய்யப்பட்ட வேத விபாகத்தைச் சிரவணம் செய்வதால் சகல பாபங்களும் நிவர்த்தியாகும்.

61—66. வைசம்பாயனருடைய சிஷ்யர்கள் சரகர்களாகவும், அத்வர்யுக்களாவும் ஆனார்கள். குருவிற்கு நேர்ந்த பிரும்மஹத்யா தோஷத்தின் நிவிருத்திக்காகக் குருவால் செய்யப்படவேண்டிய விரதத்தை அனுஷ்டித்ததால் சரகர்களானார்

கள். வைசம்பாயனருக்குப் பிரம்மஹத்யா தோஷம், நேர்ந்த பொழுது அவருடைய சிஷ்யரான யாக்ஞவல்கியர் என்பவர் ஆசாரியரை நோக்கி. "அற்ப பலமுள்ள இவர்கள் செய்யும் விரதத்தால் என்ன பயன்? மற்றவர்களால் செய்யமுடியாத விரதத்தை நான் செய்கிறேன்" என்றார். அதனைக் கேட்ட வைசம்பாயனர் கோபங்கொண்டு "பிராம்மணர்களை அவமதிக்கும் சிஷ்யனாகிய உன்னால் எனக்கு என்ன பயன்? என்னிடத்தில் அத்யயனஞ் செய்ததைச் சீக்கிரம் விட்டுவிடு" (கொடு) என்றார். அதனைக் கேட்டு தேவராதருடைய புத்திரரான யாக்ஞவல்கியர் யஜுர்வேத மந்திரங்களின் கூட்டத்தைக் கக்கிவிட்டுச் சென்றார். மற்றவர்கள் அதனைப் பார்த்து அந்த மந்திரங்களில் ஆசைகொண்டு தித்திரிப் பட்சி வேடங்கொண்டு அவைகளை யெடுத்துக்கொண்டார்கள். அதனால் அந்த அழகான யஜுஸ் சாகைகள் தைத்தரீயமென்று பெயரடைந்தன. பின் யாக்ஞவல்கியர் தம்முடைய ஆசாரியரிடமில்லாத யஜுஸ் சாகையைத் தேடிக்கொண்டு ஈசுவரனாகிய சூரியனை உபாசித்தார்.

67-72. "எப்படியெனில்— பகவானாகிய ஆதித்தியனுக்கு நமஸ்காரம். நீர் பிரம்மா முதல் ஸ்தம்பம் வரையிலுள்ள நான்குவித பிராணிகளடங்கிய ஜகத்தின் ஹ்ருதயத்தில் அந்தர்யாமியாகவும், வெளியில் கால சுரூபியாகவுமிருந்து ஆகாசம் போல உபாதியால் மறைக்கப்படாமலேயே க்ஷணம், லவம், நிமிஷம் முதலிய அவயவங்களுள்ள ஸம்வத்ஸரக் கூட்டத்தைக் கொண்டு பூமியிலுள்ள ஜலத்தைக் கிரகித்து, காலத்தில் விட்டு (மழைபெய்து) இந்த உலகத்தின் யோக க்ஷேமத்தை நிர்வகிக்கிறீர். இப்படிப்பட்ட உலக நிர்வாகத்தில் நீர் மற்றொருவரையும் அபேட்சிக்கிறதில்லை. ஓ தேவர்களுக்குள் சிறந்தவரே! பிராணிகளைப் படைப்பவரே! ஒவ்வொரு நாளும் மூன்று காலங்களிலும் வேதத்தில் சொல்லிய முறைப்படி வேதமந்திரங்களைக்

கொண்டு ஸ்தோத்திரஞ் செய்பவர்களுக்கு சகல பாபங்கள், அவைகளின் பயனுகிய துக்கங்கள் ஆகிய இவைகளுக்குக் காரண மான அஞ்ஞானத்தை நிவர்த்திப்பவரே! அப்படிப்பட்ட உம் முடைய இந்த மண்டலத்தைத் தியானஞ் செய்கிறேம். ஸ்தாவர ஜங்கம பிராணிகளெல்லாம் உம்மையே ஆசிரயித்திருக்கின்றன. அவைகளுக்கு நீர் அந்தர்யாமியாக விருந்து ஜடங்களான மனம், இந்திரியம், பிராணன் இவைகளைக் காரியத்தில் பிரவர்த்திக்கும்படி தூண்டுகிறீர். மேலும், மிக்க பயங்கரமான முகமுள்ள அந்தகாரமென்று பெயர்பெற்ற மலைப்பாம்பினுல் விழுங்கப்பட்டு இந்த ஜகத்து பிரக்ஞையற்றிருக்கிறது. அதனிடத் தில் மிக்க கருணை வைத்து நீர் ஒருவரே கருணை பொருந்திய பார்வையால் பிழைக்கச் செய்து ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு காலத்திலும் தனக்குரிய தர்மத்தை அநுஷ்டிப்பதான க்ஷேம மார்க்கத்தில் நடத்துகிறீர். பின்னும் நீர், அரசன்போல் துஷ்டர் களுக்குப் பயத்தைச் செய்துகொண்டு சஞ்சரிக்கிறீர். இந்திரன் முதலிய உலகபாலர்கள் தாமரை மொட்டைப்போன்ற அஞ்சலி களைச் செய்து உம்மைப் பூஜிக்கிருர்கள். ஓ பகவன்! மூவு லகங்களுக்கும் ஆசாரியராக இருக்கும் பிரம்மதேவர் முதலிய வர்களாலும் நமஸ்கரிக்கப்பெற்ற உம்முடைய இரு பாதார விந்தங்களையும் சேவிக்கிறேன். மற்றவர்களுக்குத் தெரியாத யஜுஸ்ஸை உபதேசிக்கவேண்டும்'' என்று ஸ்துதித்தார்.

73. மேற்காட்டிய வண்ணம் யாக்ஞவல்கியரால் துதிக் கப்பெற்ற சூர்ய பகவான் குதிரைரூபியாக அயாதயாமமென்ற யஜுஸ்ஸை யாக்ஞவல்கியருக்கு உபதேசித்தார். அந்த யஜுஸ் ஸைப் பதினைந்து சாகைகளாக யாக்ஞவல்கியர் பிரித்தார். அவை களைக் காண்வர், மாத்யந்தினர் முதலியவர்கள் பெற்றுக் கொண்டார்கள். அந்தச் சாகைகளுக்கு வாஜஸநேய சாகைக ளென்று பெயர்.

74—79. ஸாமகராகிய ஜைமினியின் புத்திரர் ஸுமந்து வென்பவர். அவருடைய புத்திரர் ஸுகர்மா வென்பவர். அவ்விருவர்களுக்கும் (புத்திரனுக்கும் பௌத்திரனுக்கும்) ஜைமினி ஒவ்வொரு ஸம்ஹிதையை யுபதேசித்தார். அவருடைய சிஷ்யரும் மேதாவியுமான ஸுகர்மா வென்பவர் ஸாம சாகையை ஆயிரம் வகையாகப் பிரித்தார். அதன்பிறகு கௌஸல்யராகிய ஹிரண்யநாபர், பௌஷ்பிஞ்சி யென்ற ஸுகர்மாவின் சிஷ்யர்களும், பிரம்மவித்துக்களுள் சிறந்தவராகிய ஆவந்தியரென்ற மற்றொருவரும் அந்த ஸம்ஹிதையை அத்தியயனஞ் செய்தார்கள். பௌஷ்பிஞ்ஜி, ஆவந்தியன், ஹிரண்யநாபன் இவர்களுக்கு ஐந்நூறு சிஷ்யர்கள். அ வ ர் க ள் வடதிசையர்களானாலும் காலத்தால் பராச்ய ஸாமகர்களென்று சொல்லப்படுகிறார்கள். லோகாக்ஷி, லாங்கலர், குல்யர், குஸீதர், குக்ஷி என்ற ஐந்து பௌஷ்பிஞ்ஜியின் சிஷ்யர்கள் நூறு நூறு ஸம்ஹிதையைப் பெற்றுக்கொண்டார்கள். ஹிரண்யநாபருடைய சிஷ்ய ரா ன கிருதரென்பவர் இருபத்துநான்கு ஸம்ஹிதைகளைத் தம்முடைய சிஷ்யர்களுக்குச் சொன்னார். மற்ற சாகைகளை ஆத்மவித்தாகிய ஆவந்தியரென்பவர் தம்முடைய சிஷ்யர்களுக்கு உபதேசித்தார்.

## அத்தியாயம் 7

### புராண லட்சணங்கள்

1-7. அதர்வ வேதத்தை யறிந்த ஸுமந்துவென்பவரும் தம்முடைய ஸம்ஹிதையைச் சிஷ்யருக்கு (கபந்தரென்பவர்) சொல்லிக்கொடுத்தார். அவர் அதனை இரண்டாகப் பிரித்துப் பத்யர், வேததர்சனர் ஆகிய இருவர்களுக்கு உபதேசித்தார். வேததர்சனர் தம்முடைய ஸம்ஹிதையை நான்கு வகையாகப்

பிரித்து, சௌகாயனி, பிரம்மபலி, நிர்த்தோஷர், பிப்பலாயனர் என்ற நான்கு சிஷ்யர்களுக்கு உபதேசித்தார். பத்யரென்பவர் தம்முடைய ஸம்ஹிதையை மூன்று வகையாகப் பிரித்துக் குமுதர், சுனகர், ஜாபாலி என்பவர்களுக்கு உபதேசித்தார். சுனகரென் பவர் தம்முடைய ஸம்ஹிதையை இரண்டாகப் பிரித்து பப்ரு, சைந்தவாயனர் என்ற இருவர்களுக்கும் உபதேசித்தார். சைந்தவாயனர் முதலியவர்களுக்கு ஸாவர்ணி முதலியவர்கள் சிஷ்யர்களானார்கள். நட்சத்திர கல்பர், சாந்திகல்பர், காசிய பர், ஆங்கிரஸர் முதலியவர்கள் அதர்வண வேதத்திற்கு ஆசாரி யர்கள். புராணங்களின் ஆசாரியர்களைச் சொல்லுகிறேன், கேளும். திரய்யாருணி, காசியபர், ஸாவர்ணி, அகிருதவ்ரணர், சிம்சுபாய னர், ஹாரீதர் ஆகிய ஆறு மகரிஷிகள் பௌராணிகர்கள். மேற் காட்டியவர்கள் வியாஸருடைய சிஷ்யரான என் பிதாவாகிய ஸூதரிடம் புராணங்களை அத்தியயனஞ் செய்தார்கள். (வியாஸர் ஆறு ஸம்ஹிதைகளைச் செய்து ரோமஹர்ஷணருக்கு உபதேசித் தார். அவரிடமிருந்து மேற்காட்டிய மஹரிஷிகள் ஒவ்வொரு வரும் ஒவ்வொரு ஸம்ஹிதையைத் தெரிந்துகொண்டார்கள் என்று தாத்பரியம்.) நான் மேற்காட்டிய ஆறு மஹரிஷிகளுக் கும் சிஷ்யனாகவிருந்து ஒவ்வொரு ஸம்ஹிதையையும் அத்யய னஞ் செய்தேன். காசியபர், நான், ஸாவர்ணி, பரசுராமருடைய சிஷ்யரான அகிருதவ்ரணர் ஆகிய நாங்கள் வியாஸருடைய புத் திரராகிய சுகரிடமாக மூல ஸம்ஹிதைகள் நான்கையும் அத்திய யனம் செய்தோம்.

8—10. ஓ பிராம்மண! புராணத்தின் லட்சணத்தைப பிரம்மரிஷிகள் சொல்லியிருக்கிறார்கள். அதனைச் சொல்லு கிறேன். வேதங்களிலும், சாஸ்திரங்களிலும் சொல்லியபடி என் புத்திக்குத் தக்கவாறு சொல்லுகிறேன். எப்படியென்றால் இந்த ஜகத்தின் ஸர்க்கம், விஸர்க்கம், விருத்தி, ரக்ஷை, மன்

வந்தரங்கள், வம்சம், வம்சானுசரிதம், ஸம்ஸ்தா, ஹேது, அபா ச்ரயம் ஆகிய பத்து லட்சணங்களுள்ளதைப் புராணமென்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். பத்து லட்சணங்களுள்ளவை மஹாபுராணங்க ளெனப்படும். ஐந்து லட்சணங்களுள்ளவை அல்ப புராணங்க ளெனப்படும். (ஸர்க்கம், பிரதிஸர்க்கம், வம்சம், மன்வந்தரம், வம்சானுசரிதம்.)

11—25. பிரதானத்தின் குணங்களுடைய க்ஷோபத்தால் மகத்தத்வமும், அதிலிருந்து மூன்று வகையான அகங்காரம், பூதசூட்சமங்கள், இந்திரியங்கள், அதிஷ்டான தேவதைகள் ஆகிய இவைகளுடைய உற்பத்தியே சர்க்கமெனப்படுகிறது. புருஷனுடைய அனுக்கிரகத்தால் மேற்காட்டியவை முந்திய கர்மவாசனையுள்ளவையாகி ஒன்றோடொன்று சேர்ந்து விதையி லிருந்து விதையுண்டாவதுபோலச் சராசரங்களாக ஆவது விசர்க்கமெனப்படுகிறது. ஜங்கமங்களான பிராணிகளுக்கு ஸ்தாவரமான பிராணிகள் ஜீவனோபாயங்களானதால் அது ஜனங்களுக்கு ராகத்தால் கிடைத்தது. ஈசுவரனால் அனுமதிக்கப் பெற்றதென்பது விருத்தி யெனப்படுகிறது. ஒவ்வொரு யுகங் களிலும் திர்யக் ஜாதிகள் (மீன், ஆமை, வராகம் முதலியவை), மனிதர்கள், மகரிஷிகள், தேவர்கள் இவர்களிடத்தில் ஸ்ரீமகா விஷ்ணு அவதாரஞ்செய்து துஷ்டர்களைச் சங்கரித்து நடத்திய லீலையே ரக்ஷா எனப்படுகிறது. மநு, மநுவின் புத்திரர்கள், அந்தக் காலத்து தேவர்கள், சப்தரிஷிகள், இந்திரன், பகவா னுடைய அம்சாவதாரம் ஆகிய இவைகள் தங்கள் தங்கள் அதிகாரத்தை அடைந்திருக்கும் காலம் மன்வந்தர மெனப்படு கிறது. பிரம்மதேவரிடமிருந்து உண்டான அரசர்களுடைய வம்சம், அவர்களுடைய சரிதம், அவர்களுடைய வம்சத்தார் களுடைய சரிதம் ஆகிய இவைகள் வம்சானுசரித மெனப்படு

கிறது. மாயையால் இந்த ஜகத்திற்கு ஏற்படுகின்ற நைமித்தி கம், பிராகிருதம், நித்தியம், ஆத்தியந்திகம் என்ற நான்கு வகையான லயங்களையே சம்சதா என்று பெரியோர்கள் சொல்லு கிறார்கள். அவித்தையால் கர்மங்களைச் செய்பவனும், ஜகத்தைப் படைப்பதற்கு ஹேதுவுமான ஜீவனே ஹேது வெனப்படுகிறான். (ஜகத்தைப் படைப்பது முதலியவை யெல்லாம் ஜீவனுடைய அதிருஷ்டத்தால் என்று கருத்து. ஜீவனுடைய போகத்திற் காகவே சகல இந்திரியங்களுடன் சரீரம் உண்டாக்கப்படுகிறது.) சிலர் பிரதானம் நிமித்தமென்றும் சொல்லுகிறார்கள். ஆனா லும் சைதன்யத்தைப் பிரதானமாக வைத்துக்கொண்டு ஜீவனையே அனுசயியென்றும், உபாதியைப் பிரதானமாக வைத்துக்கொண்டு ஜீவனையே பிரதானமென்றும் அவர்களு டைய வார்த்தைக்கு அர்த்தங்கொள்ளவேண்டும். மாயையால் ஏற்படும் ஜீவனுடைய விருத்திகளான ஜாக்ரத், சொப்பனம், சுஷுப்தி இவைகளில் எது சாக்ஷியாகத் தொடர்ந்திருக்கிறதோ, சமாதி முதலிய காலங்களில் எது சுரூபமாக விருக்கிறதோ, அந்தப் பிரம்மமே அபாச்ரயமெனப்படுகிறது (எல்லாவற்றிற்கும் ஆதாரமாயிருப்பதால்). குடம் முதலிய பதார்த்தங்களில் மண் முதலிய திரவியங்கள் சேர்ந்தும் சேராததுமாக விருப்பதுபோல ரூபம், பெயர் இவைகளில் சத்தைமாத்திரம் எப்படியிருக்கிறதோ அதுபோலும், நிஷேகம்முதல் மரணம்வரையிலுள்ள அவஸ்தை களில் அதிஷ்டானமாகவிருப்பதால் சேர்ந்ததும் சாக்ஷியாக விருப்பதால் அவைகளுடன் சம்பந்திக்காததாகவும் பரப்பிரம்ம மிருக்கிறது. (நிஷேகம், கர்ப்பம், ஜனனம், பால்யம், கௌமாரம், யௌவனம், மத்திய வயது, ஜரை, மரணம் என்று ஒன்பது அவஸ்தைகள்). சர்க்கம் முதலிய ஒன்பது வகையும் மாயாமய மென்று தெரிந்துகொண்டு தானாகவே சித்தமானது வைராக் கியத்தை யடையவேண்டும் (வாமதேவாதிகள்போல). அல்லது

யோகத்தை அனுஷ்டித்து (தேவஹூதி முதலியவர்கள்போல) ஆத்ம சுரூபத்தை அறியவேண்டும். அப்பொழுதுதான் சம்சாரம் நிவர்த்தியடையும். (புராண லட்சணங்களில் பத்தாவதான பிரம்ம சுரூபத்தை அறியவேண்டியதற்காக முந்திய ஒன்பது லட்சணங்கள் காட்டப்பட்டனவென்று கருத்து.) மேற்காட்டியபடி பத்து லட்சணங்களுள்ளவை மகாபுராணங்களென்றும், ஐந்து லட்சணங்களுள்ளவை அற்ப புராணங்களென்றும், புராணங்கள் பதினெட்டென்றும் பெரியோர்களான மஹரிஷிகள் சொல்லுகிறார்கள். அவைகள் எவையென்றால்— பிரம்ம புராணம், பத்ம புராணம், விஷ்ணு புராணம், சிவ புராணம், லிங்க புராணம், கருட புராணம், நாரத புராணம், பாகவத புராணம், அக்னி புராணம், ஸ்காந்த புராணம், பவிஷ்ய புராணம், பிரம்மகைவர்த்த புராணம், வாமன புராணம், வராக புராணம், மத்ஸ்ய புராணம், கூர்ம புராணம், பிரம்மாண்ட புராணம் என்று புராணங்கள் பதினெட்டு. ஓ சௌனக! வியாசருடைய சிஷ்யராலும் அவருடைய சிஷ்யர்களாலும் வேதம், புராணம் இவைகள் கிளைகளாகப் பிரிக்கப்பட்டன. அதனை உமக்குச் சொன்னேன். இதைக் கேட்பவர்களுக்குப் பிரம்மதேஜஸ் விருத்தியாகும்'' என்று ஸூதர் சொன்னார்.

## அத்தியாயம் 8

### மார்க்கண்டேயர் தவஞ்செய்தது

1—5. சௌனகர் சூதரை நோக்கி, "ஓ சாதுவாகிய சூத! கதை சொல்பவருக்குள் சிறந்தவரே! கரையற்ற சம்சாரமாகிய இருளில் சுற்றிக்கொண்டிருக்கும் ஜனங்களுக்கு நீர் கரையைக் காண்பிப்பவர். பிரளய காலத்தில் இந்த ஜகத் முழுவதும்

நாசத்தை அடைகிறதல்லவா? அந்தக் காலத்தில்கூட மார்க் கண்டேய மகரிஷி நாசத்தை அடையாமல் சிரஞ்சீவியாக விருப்ப தாகச் சொல்கிறார்களே அது எப்படிப் பொருந்தும்? அதனைச் சொல்லவேண்டும். மேலும் அந்த மார்க்கண்டேயர் இந்தக்கல்பத்தில் பிறந்தவர் என்று சொல்வோமாகுல் இந்தக் கல்பத்தில் இன்னும் ஒருவகையான பிரளயமும் உண்டாக வில்லையே. அப்படியிருக்க, அவர் பிரளயத்தைப் பார்த்தார் என்பது எப்படிப் பொருந்தும்? பிரளய காலத்தில் அவர் ஒருவர் மாத்திரம் சஞ்சரித்துக்கொண்டும், ஆலிலையில் சயனம்பண்ணிக் கொண்டிருந்த இளம் பருவமுள்ள ஸ்ரீமந் நாராயணனைத் தரிசித்தாரல்லவா? அது எப்படிப் பொருந்தும்? ஓ ஸூத! மகா யோகியே! நீர் எல்லாப் புராணங்களையு மறிந்தவராதலால் இந்த சம்சயத்தைப் போக்கடிக்கவேண்டும். இதனைத் தெரிந்துகொள்ள மிக்க ஆவலுள்ளவனுக விருக்கிறேன்" என்று கேட்டார்.

6—46. அதனைக் கேட்ட ஸூதர் சௌனகரை நோக்கி, "உம்முடைய கேள்வியானது நாராயணனுடைய கதையின் சம்பந்தமுள்ளதானதால் சகல உலகத்தின் பாபத்தை நிவர்த் திக்கக்கூடியதாக இருக்கிறது. மார்க்கண்டேயர் மிருகண்டு மகரிஷியினிடம் உபநயன சம்ஸ்காரத்தை யடைந்து வேதங்களை அத்தியயனம்செய்து, தம்முடைய ஜாதிக்கும் ஆசிரமத்திற்கும் தகுதியான கர்மங்களை அனுஷ்டித்து, நைஷ்டிக பிரம்மசாரி யின் விரதத்தைத் தரித்தவராகியும், சாந்தமான மனமுள்ளவ ராகியும், ஜடை, மரவுரி, கமண்டலு, தண்டம், யக்ஞோபவீதம், மேகலை, மான்தோல், ஜபமாலை, தர்ப்பம் இவைகளைத் தரித்துக் காலையிலும் மாலையிலும் அக்னி, சூரியன், ஆசாரியன், பிராம்மணன், ஹ்ருதயம் இவைகளில் பகவானைப் பூஜித்துப்

பிரம்மசாரியாகச் சஞ்சரித்தார். மேலுமவர் காலையிலும், மாலையிலும் பிக்ஷை வாங்கி, அதை ஆசாரியரிடத்தில் தெரிவித்து அவர் உத்தரவு கொடுத்தால் புசிப்பது வழக்கம். இல்லாவிடில் உபவாசமிருப்பார். அப்படி பதினாயிரக்கணக்கான வருஷங்கள் ஸ்ரீமந் நாராயணனை உபாசித்து மிருத்யுவை ஜயித்தார். அவர் மிருத்யுவை ஜயித்ததைக் கண்ணுற்ற பிரம்மதேவர், பரமசிவன், பிருகு, தக்ஷர், பிரம்மாவின் மற்ற குமாரர்கள், மனிதர்கள், தேவர்கள், பிதிருக்கள், மற்ற பிராணிகள் ஆகிய எல்லாரும் மிகவும் ஆச்சரியத்தை அடைந்தார்கள். இப்படி மார்க்கண்டேயர் பிரம்மசாரி விரதத்துடன் யோகத்தை அனுஷ்டித்து அதனால் ராகத்வேஷங்களற்று, சுத்தமாக விருக்கும் ஹ்ருதயத்தில் ஸ்ரீமந் நாராயணரைப் பூஜித்தார். மேலும் தவம், வேதாத்யயனம், இந்திரியங்களை அடக்குவது இவைகளைச் செய்து அவைகளைப் பகவானிடத்தில் சமர்ப்பித்தார். அந்த மகா யோகியான மார்க்கண்டேயர் மனத்தைப் பகவானிடத்தில் செலுத்தி, தவம் செய்யும்பொழுது ஆறு மனுக்கள் சென்றார்கள். (ஆறு மனுக்களுடைய காலம் சென்றதென்று கருத்து.) இந்த ஏழாவது மன்வந்தரத்தில் மகேந்திரன் அவருடைய தவத்தினால் சந்தோஷத்தை யடைந்து அதற்கு விக்னஞ் செய்ய வாரம்பித்தார். அப்பொழுது கந்தர்வர்கள், அப்சரசுக்கள், மன்மதன், வசந்தன், தென்றல் காற்று, ரஜோகுணத்தின் குழந்தையான உலோபம், மதம் ஆகிய இவைகள் மகேந்திரனுடைய உத்தரவினால் ஹிமயமலையின் வடபுறத்திலிருக்கும் மார்க்கண்டேயருடைய ஆச்சிரமஞ் சென்றார்கள். அவ்விடத்தில் புஷ்பபத்ராவென்ற நதி ஓடுகிறது; சித்ரா என்ற சிலையொன்று மிருக்கிறது. அந்த ஆச்சிரமமானது புண்ணியத்தைக் கொடுக்கக்கூடியது; புண்ணிய விருட்சங்களும், புண்ணியமான கொடிகளும், புண்ணியமான பறவைகளும் அவ்

விடத்திலிருக்கின்றன. அவ்விடத்திலுள்ள குளம் முதலிய ஜலாதாரங்கள் புண்யகரங்களும், சுத்தங்களுமாக விருக்கின்றன. மதித்த வண்டுகள் பாடுகின்றன; மதங்கொண்ட குயில்கள் கூவுகின்றன; மயில்கள் மிக்க மதங்கொண்டு நர்த்தனஞ் செய்கின்றன; மதித்த பறவைகள் கூட்டமாக வசிக்கின்றன; அந்த ஆச்சிரமத்தில் வாயு பிரவேசித்துப் பனியால் குளிர்ந்த மலையாறுகளின் ஜலத்துளிகளுடனும், புஷ்ப வாசனைகளுடனும் மன்மதனை விருத்திசெய்ய வாரம்பித்தான். (மன்மத தாபமுண்டாகும்படி வாசனையுடன் குளிர்ந்த காற்று வீசியதென்று கருத்து.) வசந்தன் அவ்விடத்தில் பிரவேசித்தான். மரங்களும், கொடிகளும் தளிர்த்தன; புஷ்பித்தன; இராத்திரியில் சந்திரன் பிரகாசித்தான்; மன்மதன், வில், பாணம் இவைகளைத் தரித்து அப்ஸர ஸ்திரீகளுடன் அவ்விடத்தில் காணப்பட்டான். கந்தர்வர்கள் பாடிக்கொண்டும், வாத்தியங்களைக் கோஷித்துக்கொண்டும் மன்மதனைப் பின்தொடர்ந்தார்கள். மேற்காட்டிய மன்மதன் முதலிய தேவேந்திரனைச் சார்ந்தவர்கள் மார்க்கண்டேயரைக் கண்டார்கள். அவர் அக்னி காரியத்தை முடித்து, கண்களை மூடிக்கொண்டு தியானஞ் செய்துகொண்டிருந்தார்; மகரிஷி வேடங்கொண்ட அக்னி போல் ஜ்வலித்துப் பிறரால் அவமதிக்கக்கூடாதவராக விருந்தார். அவருடைய முன்னிலையில் அப்ஸரசுக்கள் நர்த்தனஞ் செய்தார்கள்; கந்தர்வர்கள் பாடினார்கள்; வாத்தியக்காரர்கள் மிருதங்கம், வீணை, பணவம் இவைகளை மதுரமாக முழக்கினார்கள். மன்மதன் ஐந்து முனைகளுள்ள அஸ்திரத்தை வில்லில் தொடுத்தான். (உலர்த்துவது, மோகிக்கச்செய்வது, எரிப்பது, காய்ச்சுவது, பைத்தியத்தை உண்டுபண்ணுவதென்று ஐந்து முனைகள்.) இப்படி வசந்தன் உலோபம் முதலிய இந்திரனுடைய வேலைக்காரர்கள் மார்க்கண்டேயருடைய மனத்தைக்

கலக்கினார்கள். அப்பொழுது புஞ்சிகஸ்தலாவென்ற அப்ஸரஸ் பந்து விளையாடினாள். அவளுடைய ஸ்தனங்கள் பருத்திருப்ப தால் இடை வணங்குகிறது. தலையிலிருந்து புஷ்பமாலை பூமி யில் விழுகிறது. இப்படி அவள் பந்து விளையாடும்பொழுது ஒட்டியாணம் நழுவி, காற்று வேகத்தால் வஸ்திரம் பூமியில் விழுந்தது. அந்தச் சமயம் பார்த்து, இந்தச் சமயத்தில் மக ரிஷியை ஜயித்துவிடலாமென்று மன்மதன் பாணத்தைப் பிர யோகித்தான். தெய்வப் பிரயத்தனமில்லாத காலத்தில் முயற்சிப்பவனுடைய முயற்சிபோல் அவை யாவும் வீணாயின. (மகரிஷியின் மனங் கலங்கவில்லையென்று கருத்து.) மேற் காட்டியவண்ணம் மன்மதன் முதலியவர்கள் மகரிஷிக்கு அபராதஞ்செய்தும் அவரை ஒன்றுஞ்செய்ய முடியாமல் அவ ருடைய தேஜஸ்ஸால் எரிக்கப்பட்டுத் திரும்பி சுவர்க்கஞ் சென் றார்கள். அது சிறுவர்கள் மகா சர்ப்பத்தைத் தட்டி எழுப்பி யது போலிருந்தது. ஓ சௌனக! இந்திரனுடைய வேலைக் காரர்கள் மகரிஷியின் தவத்திற்கு விக்கினஞ்செய்தும், அவர் மனங்கலங்காமலிருந்தது ஆச்சரியமல்ல. பெரியோர்களுடைய மனம் ஒருபொழுதும் கலங்காது. மன்மதன் முதலியவர்கள் தேஜஸ் இல்லாமலிருப்பதைப் பார்த்தும், மகரிஷியின் மகி மையை அவர்கள் முகமாகக் கேள்விப்பட்டும் மகேந்திரன் மிக்க ஆச்சரியத்தை அடைந்தார். இப்படி பகவானிடத்திலேயே மனத்தைச் செலுத்தி, தவம் முதலியவைகளால் பகவானை ஆரா தித்துக்கொண்டிருக்கும் மார்க்கண்டேயரை அனுக்ரகிப்பதற் காக நர நாராயண சுரூபியான மகாவிஷ்ணு அந்த ஆச்சிரமத் திற்கு வந்தார். அவ்விருவர்களும் புதிதாக மலர்ந்த தாமரை மலர்போன்ற கண்களுள்ளவர்கள்; நான்கு கைகளுள்ளவர் கள்; கிருஷ்ணாஜினத்தையும், மரவுரியையும் உடுத்திக்கொண் டவர்கள்; பவித்திரந் தரித்த கைகளுள்ளவர்கள்; மூன்றுக

மடித்த யஜ்ஞோபவீதம், கமண்டலு, மூங்கில், தண்டம் இவை களைத் தரித்தவர்கள்; அவர்களில் நரர் வெண்மை நிறமுள்ள வர்; நாராயணன் பச்சை நிறமுள்ளவர்; தாமரை மணிகளால் செய்யப்பட்ட ஜபமாலையையும், கொசு முதலிய ஜந்துக்களை ஓட்டுவதற்காக வஸ்திரம், தர்ப்பமுஷ்டி இவைகளைத் தரித்தவர் கள். தவமே மகரிஷிவேடங்கொண்டிருப்பது போல் பிரகாசிப் பவர்கள்; மின்னல் போன்ற தேஜசுள்ளவர்கள்; உயர்ந்த சரீர முள்ளவர்கள்; சிறந்த தேவர்களாலும் பூஜிக்கப்பெற்றவர்கள்; நாராயணருடைய சுரூப பூதர்களான அந்த நரநாராயண மக ரிஷிகளைக் கண்டவுடன் மார்க்கண்டேயர் சீக்கிரமாக எழுந்து தண்டம்போல் நமஸ்கரித்தார். அவர்களைத் தரிசித்தவுடன் மார்க்கண்டேயருடைய தேகம், இந்திரியங்கள், மனம் ஆகிய இவைகள் சாந்தங்களாயின; அவருக்கு மயிர்க்கூச்சலுண்டா யிற்று; ஆனந்தக் கண்ணீர் பெருகியது; அதனால் அவர்களைப் பார்க்கமுடியாதவராக இருந்தார். மேலுமவர் எழுந்திருந்து மிகுந்த வணக்கத்துடன் அஞ்சலிசெய்து அன்புடன் பார்த்து நமஸ்காரம், நமஸ்காரம் என்று தழுதழுத்த ஸ்வரமாகச் சொன்னார். பின்புமவர் அவர்களுக்கு ஆசனங் கொடுத்து அவர்களுடைய பாதங்களை அலம்பிச் சந்தனம், தூபம், தீபம், புஷ்பம் இவைகளால் பூஜித்தார். பின்பு சுகமாக ஆசனத்தில் உட்கார்ந்து அனுக்கிரஹிப்பதில் நோக்கமுள்ளவர்களான சிறந்த அந்த மகரிஷிகளைத் திரும்பவும் நமஸ்கரித்து மார்க்கண்டேயர் துதிக்கலானார். எப்படியெனில்— "ஓ பிரபுவே ! பிரம்மா, பரமசிவன் முதலியவர்களுடைய பிராணன் உம்முடைய கடா க்ஷத்தால் தூண்டப்பட்டு அசைகிறது. அதனால் வாக்கு, மனம், இந்திரியங்கள் ஆகிய இவை அதன் காரியத்தைச் செய்கின்றன. அதுபோல என்னுடைய பிராணன் முதலியவையும் உமக்கு அதீனங்களாக இருக்கின்றன. (நான் சுவாதந்திரியமில்லாதவன்.

உம்மை எப்படித் துதிப்பேனென்று கருத்து.) ஆனாலும் உம்மை உபாசிப்பவர்களுக்கு நீர் ஆத்ம பந்துவாக இருக்கிறீர். (தகப்பன் முதலியவர்கள் சரீர பந்துக்கள்; நீர் அப்படியில்லை என்று தாத்பரியம்.) நீர் இந்த உலகத்தைக் காப்பாற்றுவதற்காக மத்ஸ்யம் முதலிய அவதாரங்களைச் செய்வதுபோல மூவுலகங்களைக் காப்பாற்றுவதற்காகவும், துக்கத்தைப் போக்கடிப்பதற்காகவும், மோட்சத்திற்காகவும் இந்த இரண்டு சரீரங்களைத் தரிக்கிறீர். ஓ பகவன்! பட்டுப்பூச்சி பட்டை யுண்டுபண்ணி, பின்பு தன்னிடத்தில் அடக்கிக்கொள்வதுபோல இந்த ஜகத்தைப் படைத்துச் சங்கரிக்கிறீர். (சிருஷ்டிப் பிரளயத்தில் பிறரை அபேட்சிக்கிறதில்லை என்று தாத்பரியம்.) தாவர ஜங்கமங்களுக்கு அதிபதியும், அவைகளை சம்ரட்சிப்பவருமான உம்முடைய பாதத்தை உபாசிக்கிறேன். உம்முடைய பாதசேவை செய்பவனுக்குக் கர்மமாவது, குணங்களாவது, காலமாவது கெடுதியைச் செய்கிறதில்லை; வேதத்தின் தாத்பரியத்தைத் தெரிந்துகொண்ட மகரிஷிகள் உம்முடைய பாதத்தைத் துதிக்கிறார்கள்; நமஸ்கரிக்கிறார்கள்; அடிக்கடி பூஜிக்கிறார்கள்; தியானிக்கிறார்கள். ஓ ஈச! இரண்டு பரார்த்தம் ஆயுளுள்ள பிரும்மதேவர் காலரூபியான உம்மிடம் பயப்படுகிறார். ஆதலால், அவரால் படைக்கப்பெற்ற ஜனங்கள் பயப்படுகிறார்களென்பது நிச்சயம். இப்படிப் பல வகையிலும் பயமுள்ளவர்களான ஜனங்கள் க்ஷேமத்தை யடையவேண்டுமானால் மோட்ச சுரூபியான உம்முடைய பாதத்தைச் சேவிக்கவேண்டும். அதனைக்காட்டிலும் வேறு உபாயமில்லை. ஆத்ம சுரூபத்தை மறைக்கக்கூடியதும், பயனற்றதும், அற்பமும், ஸ்திரமில்லாததும், தோற்றமாத்திரமுள்ளதுமான இந்தச் சரீரம் முதலியவைகளில் அபிமானத்தை யொழித்து ஜீவனுக்கு நியந்தாவும், ஸத்யஞான சுரூபியு

மான உம்முடைய பாதத்தைச் சேவிக்கிறேன். அது சகல இஷ்டங்களையும் கொடுக்கக்கூடியது. ஓ ஈச ! ஆத்ம பந்துவாகிய நீர் இந்த ஜகத்தை ரட்சிப்பது, படைப்பது, ஸம்கரிப்பது ஆகிய இவைகளுக்கு ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்களை முறையே காரணங்களாக மாயையால் ஏற்படுத்தியிருக்கிறீர் (விஷ்ணு, பிரம்மா, ருத்திரரென்று). அவையெல்லாம் உம்முடைய லீலைகளே. ஆனாலும் ஸத்வ மூர்த்தியை உபாஸிப்பதால் சாந்தி யுண்டாகிறது; மற்றவற்றை உபாஸிப்பதால் வியசனம், மோகம், பயம் இவைகள் உண்டாகின்றன. ஓ பகவன் ! ஸத்வ மூர்த்தியே உம்முடைய பக்தர்களுக்குப் பிரியமானது. அவர்கள் அதனையே உபாஸிக்கிறார்கள். ஸத்வமே உம்முடைய ரூபமென்று சொல்லுகிறார்கள். அதனால் வைகுண்டமும், அபயமும், ஆத்ம சுகமும் கிடைக்கின்றன. இதுபோல் மற்ற மூர்த்திகளை உபாஸிப்பதால் இவைகள் கிடைக்கிறதில்லை. அப்படிப்பட்ட பகவானும், மிக்க மகிமையுள்ளவரும், சகல ஜகத் ஸ்வரூபியும், ஜகத்திற்குக் குருவும், பரதேவதையும், புருஷோத்தமரும் நாராயண மஹரிஷியும், நரோத்தமரும், சுத்தரும், மௌனமாகவிருப்பவரும், வேத மார்க்கத்தைப் பரவச்செய்பவருமான உம்மை நமஸ்கரிக்கிறேன். அஸத்தாகிய இந்திரியங்களால் பிரமித்த புத்தியுள்ள புருஷன் தன்னுடைய இந்திரியம் முதலியவைகளுக்கு நியந்தாவாகவிருக்கும் உம்மைத் தெரிந்துகொள்வதில்லை. நீர் ஒவ்வொருவருடைய ஹிருதயத்திலும் இருக்கிறீர். ஒவ்வொரு பதார்த்தத்திலும் இருக்கிறீர். ஆனாலும் உம்முடைய மாயையால் புத்தி மயக்கம் அடைந்து ஜனங்கள் தெரிந்துகொள்ளுகிறதில்லை; ஆனாலும் எல்லாவற்றிற்கும் குருவாகிய உம்மால் வெளியிடப்பட்ட வேதத்தை அத்தியயனம் செய்து, அதனுடைய அர்த்தத்தைத் தெரிந்துகொண்டு உம்மைத் தெரிந்துகொள்ளுகிறார்கள்.

பிரம்மாதிகளான ஞானிகள் சாங்கியம், யோகம் முதலியவை களால் உம்மைத் தெரிந்துகொள்ள முயற்சித்தும் முடியவில்லை. நீர் ஸாங்கியம் முதலிய வாதங்களுக்கு அநுகூலமான சுபா வங்களால் மறைக்கப்பட்ட ஞானமுள்ளவர். உம்மை வேதத் தாலேயே தெரிந்துகொள்ளவேண்டும். சத்துவ குணத்தைப் பிரகாசிக்கச் செய்பவரும் மகா புருஷருமாகிய உம்மை நமஸ் கரிக்கிறேன்'' என்று தோத்திரஞ் செய்தார்.

## அத்தியாயம் 9

## மார்க்கண்டேயர் பகவானுடைய மாயையைப் பார்த்தது

1—3. புத்திசாலியாகிய மார்க்கண்டேயரால் இம்மாதிரி துதிக்கப்பெற்ற நரருடன் கூடிய நாராயணன் மிகவும் சந்தோ ஷித்து அவரை நோக்கி, "ஓ பிரம்ம ரிஷிகளுக்குள் சிறந்தவரே! நீர் சித்தத்தைத் யொருவகைப்படுத்தித் தவம், வேதாத்தியய னம், இந்திரியங்களை அடக்குவது முதலியவைகளைச் செய்து அனன்யமாக என்னிடம் பக்திசெய்ததால் கிருதார்த்தரானீர். உம்முடைய விரதத்தால் நாம் சந்தோஷிக்கிறோம். வரத்தை அளிப்பவர்களுக்குள் சிறந்தவர்களான நம்மிடமிருந்து இஷ்ட மான வரத்தைப் பெற்றுக்கொள்ளும்'' என்று சொன்னார்.

4—6. அதனைக் கேட்ட மார்க்கண்டேயர் பகவானை நோக்கி, "ஓ தேவர்களுக்குள் சிறந்தவரே! அண்டினவர்க ளுடைய உபத்திரவத்தை நிவர்த்திப்பவரே! நாசமற்றவரே! உம்முடைய மேன்மையைக் காண்பித்தீர். பிரம்மா முதலிய தேவர்கள் உம்முடைய பாதாரவிந்த தரிசனத்தை விரும்பி யோகத்தை அனுஷ்டித்து மனத்தைச் சுத்திசெய்துகொள்ளு கிறார்கள். அப்படிப்பட்ட உம்மை நான் நேரில் தரிசிக்கிறேன்.

இதைவிட வேறு எனக்கு என்ன வேண்டும்? தாமரை இதழ் போன்ற கண்களுள்ளவரே! புண்ணிய சுலோகர்களுக்குள் சிறந்தவரே! உம்முடைய மாயையால் உலக பாலகர்கள் முதலிய ஜனங்கள் மோகித்து ஆத்ம வஸ்துவினிடத்தில் பேதத்தைச் சொல்லுகிறார்களல்லவா? அந்த மாயையை எனக்குக் காண்பிக்கவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

7—34. இப்படி மார்க்கண்டேய மகரிஷியினால் துதிக்கப் பெற்றும் பூஜிக்கப்பெற்றும் நாராயண மகரிஷி, 'அப்படியே செய்வோம்' என்று சிரித்துச் சொல்லிக்கொண்டு பதரிகா வனஞ் சென்றார். மார்க்கண்டேய மகரிஷி அந்த விஷயத்தையே நினைத்துத் தம்முடைய ஆசிரமத்திலேயே வசித்து, அக்னி, சூரியன், சந்திரன், ஜலம், பூமி, வாயு, ஆகாயம், தாம் ஆகிய இவைகளில் பகவானைத் தியானித்து, சங்கற்ப திரவியங்களால் பூஜித்துவந்தார். சில சமயம் மிக்க பக்தியால் பரவசராகிப் பூஜையை மறந்திருப்பதுமுண்டு. ஓ சௌனகா! இப்படி மார்க்கண்டேயர் செய்துவரும்பொழுது ஒரு நாள் புஷ்ப பத்திரா என்னும் நதியின் கரையில் சந்தியோபாஸ்தி செய்துகொண்டிருந்தார். அப்பொழுது பயங்கரமான சப்தத்துடன் பெருங் காற்று உண்டாயிற்று. அதன்பின் பயங்கரங்களான மேகங்கள் உரக்கக் கர்ஜித்துக்கொண்டு மழை பெய்தன; மின்னல்கள் பிரகாசித்தன; ரதத்தின் அச்சுப்போலப் பருத்த மழைத் துளிகள் விழுந்தன. அதனால் நான்கு சமுத்திரங்களும் மிக்க அலைகளுடன் சப்தித்துக்கொண்டு பொங்கி ஜகத்தை முழுகச் செய்தன. அதிலுள்ள * முதலை முதலிய ஜந்துக்களும், சுழல்களும் பயங்கரமாக இருந்தன. மின்னல்களாலும், கடுமையான வெயிலாலும், ஜலத்தாலும், நான்கு வகையான பிராணிகளடங்கிய உலகமும் தாமும் தவிப்பதைக் கண்ணுற்ற மார்க்கண்டேயர் வருத்தமடைந்து நடுங்கினார். காற்று

அதிகமாக இருந்ததால் அலைகள் விசேஷமாயின; மழையும் பெய்துகொண்டே இருந்தது. அதனால் சமுத்திரம், துவீபம், வர்ஷமென்ற பிரிவுள்ள பூமி முழுவதையும் ஜலம் கவர்ந்து கொண்டது. அப்பொழுது பூமி, அந்தரிக்ஷம், நக்ஷத்திரங்கள் ஆகிய இவைகளடங்கிய மூவுலகமும் ஜலத்தில் மூழ்கின. அப்படிப்பட்ட பிரளய ஜலத்தில் அந்த மார்க்கண்டேய மகரிஷி ஒருவராக ஜடைகளை விரித்துக்கொண்டு மூடன்போலும் குருடன் போலும் சுற்றிக்கொண்டிருந்தார். மேலும் அவர் பசி, தாகம் இவைகளுள்ளவராக இருந்தார். மகரம் முதலிய ஜல ஜந்துக்கள் அவரை உபத்திரவித்தன. அலைகளாலும் காற்றினாலும் அவர் அடிக்கப்பட்டார். மேலும் அதிக இருளாக இருந்தமையால் ஆகாயம், பூமி, திக்குகள் இவைகள் தெரியாமல் அலைந்துகொண்டிருந்தார். இந்த மகரிஷியைப் பக்ஷிப்பதற்காக ஜல ஜந்துக்கள் ஒன்றோடொன்று சண்டையிட்டன. சில சமயம் ஜந்துக்களால் உபத்திரவிக்கப்பெற்றும், சில சமயம் சுழலில் அகப்பட்டு அலைகளால் அடிக்கப்பெற்றும், சோகம், மோகம், துக்கம், சுகம் இவைகளை யடைந்து விஷ்ணுவின் மாயையால் மோகித்து வெகு வருஷகாலம் அலைந்தார். பின்பு ஒருகால் அந்த மகரிஷி மேடான ஓர் இடத்தில் ஒரு ஆலங்கன்று இருக்கக் கண்டார். அது பழங்களாலும், புஷ்பங்களாலும், தளிர்களாலும் அழகாக இருந்தது. " ஈசான திக்கில் நீண்டிருக்கும் அதன் கிளையில் ஒரு இலையில் ஒரு குழந்தை படுத்திருக்கக் கண்டார். இருளைப் போக்கக்கூடிய காந்தியுள்ளதாக அந்தக் குழந்தை பிரகாசித்தது. மேலும் அந்தச் சிசு, உயர்ந்த மரகதம் போலப் பச்சை நிறமுள்ளது ; அழகிய தாமரை மலர்போன்ற முகமுள்ளது ; சங்கம்போன்ற கழுத்துள்ளது; விசாலமான மார்புள்ளது; அழகான முகமுள்ளது; மனோகரமான புருவங்களுள்ளது; மூச்சுக் காற்றினால் அசையும் தலைமயிர்

களுள்ளது; சங்கத்தின் மத்தியம் போன்ற காதுகளில் மாதுளைப் புஷ்பத்தைத் தரித்தது; பவழம்போலச் சிவந்த உதடுகளின் காந்தியால் கொஞ்சம் சிவப்பான அமிருதச் சிரிப்புள்ளது; தாமரை மலரின் மத்தியம்போலச் சிவந்த கண்களுள்ளது; அழகான சிரிப்புப் பொருந்திய பார்வையுள்ளது; அதன் மூச்சுக் காற்றினுல் வயிற்றிலுள்ள மூன்று மடிப்புக்கள் அசைந்தன; தொப்புள் பள்ளமாக விருந்தது; அப்படிப்பட்ட அந்தச் சிசு அழகான விரல்களுள்ள கைகளால் காலையெடுத்து வாயில் வைத்து நக்கிக்கொண்டிருந்தது—அதனைத் தரிசித்து மார்க்கண்டேயர் மிகவும் ஆச்சரியத்தை அடைந்தார். அந்தக் குழந்தையைக் கண்டவுடன் மார்க்கண்டேயருடைய இருதயமும் கண்களும் மலர்ந்தன; சரீரத்தில் மயிர்க்கூச்சலுண்டாயிற்று. பின்பு அவர், மிக்க ஆச்சரியத்துடன் அந்தக் குழந்தையை 'நீர் யார்' என்று கேட்பதற்காக அதன் சமீபஞ் சென்றார். அந்தச் சமயத்தில் குழந்தையின் மூச்சுக்காற்றினுல் கொசுப் போல மார்க்கண்டேயர் அதன் வயிற்றுக்குள் பிரவேசித்தார். அந்தக் குழந்தையின் வயிற்றில் ஜகத்து முழுவதுமிருப் பதைக் கண்டு ஆச்சரியத்தை யடைந்து மயங்கினுர். ஆகாயம், பூமி, அந்தரிக்ஷம், நட்சத்திரங்கள், மலைகள், சமுத்திரங்கள், துவீபங்கள், தேசங்கள், திக்குகள், தேவர்கள், அசுரர்கள், காடுகள், நதிகள், பட்டினங்கள், கோகுலங்கள், பயிரிடுவோர்கள் இருக்குமிடம், ஆசிரம தர்மங்கள், வர்ண தர்மங்கள், மகா பூதங்கள், அவைகளாலேற்பட்ட சரீரங்கள், காலம், பலவகை யான யுகங்கள், கல்பங்கள், மற்றும் வியவகாரத்திற்கு உப யோகமான வஸ்துக்கள் ஆகிய இவைகளுடன் உண்மைபோல் பிரகாசிக்கும் பிரபஞ்சத்தைப் பார்த்தார். மேலும், அவ் விடத்தில் இமய மலையையும், தம்முடைய ஆசிரமத்தையும், புஷ்ப பத்திரா நதியையும் கண்டார். உடனே அந்தக் குழந்தைத்

யினை மூச்சுக் காற்றினுல் வெளியில் தள்ளப்பட்டுப் பிரளய ஜலத்தில் விழுந்தார். அவ்விடத்தில் மேடான பூமியின் பாகத்தில் ஆலமரத்தையும், அதன் இலையில் படுத்திருக்கும் அந்தக் குழந்தையையும், அந்தக் குழந்தை அன்பு பொருந்திய அமிருத கடாட்சத்தால் தம்மை அனுக்கிரகிப்பதையும் பார்த்தார். மேலும் அந்தக் குழந்தையைத் தம்முடைய இருதயத்திலு மிருக்கக்கண்டார். அதனுல் மார்க்கண்டேயர் மிகவும் சந்தோஷித்து அதனை ஆலிங்கனஞ் செய்துகொள்ள சமீபத்தில் சென்றார். எல்லாப் பிராணிகளுடைய ஹிருதய குகையில் வசிப்பவரும் யோகேசருமாகிய பகவான் அதனைக் கண்ணுற்று அந்தர்த்தானத்தை அடைந்தார் (மறைந்தார்). அது தெய்வ பலமில்லாத காலத்தில் புருஷனுடைய முயற்சி பயன்படாதது போலிருந்தது. அவர் மறைந்தவுடன் அந்த ஆலமரமும், பிரளயகால ஜலமும் மறைந்தன. மார்க்கண்டேய மகரிஷி தம்முடைய ஆசிரமத்தில் முன்போல் வீற்றிருந்தார்.

---

# அத்தியாயம் 10

## சிவன் மார்க்கண்டேயருக்கு வரங்கொடுத்தது

இப்படி மார்க்கண்டேய மகரிஷி நாராயணரால் காட்டப்பட்ட யோகமாயையின் மகிமையைப் பார்த்து, "ஓ ஹரியே! நாராயண! உம்முடைய மாயையால் வித்வான்கள்கூட மோகிக்கிறார்கள். அவர்களுடைய ஞானம் ஞானம்போல் தோன்றுகிறதேயொழிய ஞானமல்ல. நீர் அண்டினவர்களுடைய பயத்தை நிவர்த்திப்பவர். அப்படிப்பட்ட உம்முடைய பாதத்தைச் சரணமடைகிறேன்" என்று சொல்லி நாராயணரையே சரணமடைந்தார்.

3—18. இப்படி அந்த மகரிஷி தேகம், இந்திரியம், மனம் ஆகிய இவைகள் சலிக்காமல் நாராயணனையே தியானஞ்

செய்துகொண்டிருந்தார். அப்பொழுது பரமசிவன் பார்வதியுடன் விருஷபத்தின் மீதேறி, தம்முடைய கணங்களுடன் ஆகாய மார்க்கமாக அவ்விடம் வந்து அந்த மகரிஷியைக் கண்டார். அப்பொழுது பார்வதி பரமசிவனை நோக்கி, "ஓ பகவன்! இந்தப் பிராம்மணன் சரீரம், இந்திரியம், மனம் இவைகள் அசையாதவனுகிக் காற்றில்லாததால் அலையற்று அசையாமலிருக்கும் சமுத்திரம்போலச் சாந்தராக இருக்கிருர். இவரைப் பாரும். நீர் சித்தியைக் கொடுப்பவரானதால் இவரை அனுக்கிரகியும்" என்ருள். அதனைக் கேட்ட பரமசிவன் பார்வதியை நோக்கி, "இந்தப் பிரம்மரிஷி நாசமற்ற மகாபுருஷனிடத்தில் மிகவும் பக்திசெய்துகொண்டிருக்கிருர். ஆனதால் மோட்சத்தையாவது, அதற்குத் தகுந்த பயன்களையாவது இவர் ஆசைப்படவில்லை; ஆனாலும் சாதுவாகிய இந்த மகரிஷியுடன் பேசுவோம். மனிதர்களுக்குச் சாது சங்கம் கிடைத்தால் இது முக்கிய லாபம்" என்று சொல்லிக்கொண்டு சாதுக்களுக்குக் கதியாகிய பரமசிவன் மார்க்கண்டேயரிடம் வந்தார். அவர் சகல வித்தைகளுக்கும் அதிபதி; சகல பிராணிகளுக்கும் ஈசுவரன்; அப்பொழுது மார்க்கண்டேயர் அந்தக்கரண விருத்திகளை அடக்கிக் கொண்டிருந்தமையால் ஜகத் சுரூபிகளான பார்வதி, பரமசிவன் ஆகிய இவர்கள் வந்தது மகரிஷிக்குத் தெரியவில்லை. அவர் தம்மையும் உலகத்தையும் மறந்திருந்தார். கைலாஸ அதிபதியாகிய பரமசிவன் அதனைத் தெரிந்துகொண்டு யோக மாயையால் மகரிஷியின் இருதயத்தில் பிரவேசித்தார். அது வாயு இடுக்கில் பிரவேசித்ததுபோலிருந்தது. அப்பொழுது மார்க்கண்டேயர் தம்முடைய இருதயத்தில் பரமசிவனைக் கண்டார். அந்தப் பரமசிவன் மின்னல்போலப் பொன்னிறமான ஜடைகளைத் தரித்தவர்; மூன்று கண்களுள்ளவர்; எட்டு கைகளுள்ளவர்; உயரமான சரீரமுள்ளவர்; உதித்த சூரியன்போல்

பிரகாசிப்பவர், புலித்தோலை உடுத்திக்கொண்டும், சூலம், தனுசு, பாணம், சத்தி, கேடகம், ஜபமாலை, டமரு, கபாலம், பாசு இவைகளைத் தரித்தவர். இப்படிப்பட்ட பகவானைத் தரிசித்து 'இது என்ன? எங்கிருந்து வந்தது' என்று ஆச்சரியமடைந்து கண்களைத் திறந்து பார்த்தார். பரமசிவனையும் பார்வதியை யும் பிரமத கணங்களையும் கண்டார். மூன்று உலகங்களுக்கும் முக்கிய குருவான பரமசிவனுக்கு நமஸ்காரஞ்செய்து நல் வர வாருக என்று கேட்டு ஆசனம், பாத்தியம், அர்க்கியம், புஷ்ப மாலை, சந்தனம், தூபம், தீபம் முதலியவைகளைக் கொடுத்து, பகவானையும் பார்வதியையும் பிரமத கணங்களையும் பூசித்தார். மேலும் அவர் "ஓ ஈசான! விபுவே! தம்முடைய மகிமையால் பூர்ண காமராகிய உமக்கு நான் எதனைச் செய்யவேண்டும்? உம் மால் இந்த உலகம் சுகத்தை அடைந்திருக்கிறது. சாந்தரும், சத்துவ குணத்திற்கு அதிஷ்டாதாவும், விசேஷ சுகத்தைக் கொடுப்பவரும், ரஜோ குணத்தை அடைபவரும், தமோ குணத்தையடைந்து கோர சுரூபியுமான சிவனுகிய உமக்கு நமஸ்காரம்" என்றார்.

19—25. அதனைக் கேட்ட பகவான் மகரிஷியை நோக்கி, "பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்று மூன்று தேவர்களாகிய நாங்கள் வரத்தை அளிப்பவர்களுக்கு அதிபதிகள். எங்களைத் தரிசித்தால் வீண்போகாது. எங்களிடமாக ஜனங்கள் க்ஷேமத்தை அடைவார்கள். ஆனதால் இஷ்டமான வரத்தைக் கேளும். எந்தப் பிராம்மணர்கள் சாதுக்களாகவும், சாந்தர்களாகவும், ஒன்றிலும் ஆசை யில்லாதவர்களாகவும், பிராணிகளிடத்தில் பிரீதியுள்ளவர்களாகவும், நம்மிடத்தில் விசேஷ பக்தர்களாக வும், விரோத புத்தியற்றவர்களாகவும், எல்லாவற்றையும் சம மாகப் பார்ப்பவர்களாகவும் இருக்கிறார்களோ அவர்களைச் சகல உலகங்களும், உலக பாலகர்களும் ஸ்தோத்திரம் செய்கிறார்கள்;

பூஜிக்கிறார்கள்; உபாசிக்கிறார்கள். நான், பகவானாகிய பிரம்ம தேவர், ஸ்ரீ மகாவிஷ்ணு ஆகிய மூன்று தேவர்களும் ஈசுவரர்கள் (ஒன்று என்று கருத்து). மேற்காட்டிய சாந்தர்களான சாதுக்கள் என்னிடத்திலும், பிரம்மாவிடத்திலும், நாராயணனிடத்திலும் கொஞ்சமாவது பேத புத்தியைச் செய்யமாட்டார்கள். மேலும், தம்மையும் பிறரையும் ஒன்றாகவே நினைப்பார்கள். அதனால் உம்மை நாம் அடைகிறோம். ஜல ரூபமாயிருப்பவை மாத்திரம் தீர்த்தங்களல்ல; மண்ணினாலும், கல்லாலும் செய்யப்பட்டவை மாத்திரம் தேவர்களல்ல; தீர்த்தம் முதலியவை வெகுகாலத்திற்குப்பின் பரிசுத்தப்படுத்துகின்றன. சாதுக்கள் தம்மைத் தரிசித்த மாத்திரத்தில் சுத்தப்படுத்துகிறார்கள். பிராம்மணர்கள் சித்தத்தை ஒருவகைப்படுத்துவதாலும், தவம், வேதாத்தியயனம், இந்திரியங்களை அடக்குவது ஆகிய இவைகளாலும் நம்முடைய சுருபமான வேதத்தைச் சம்ரட்சிக்கிறார்கள். அதனால் அவர்களை நமஸ்கரிக்கிறோம். அப்படிப்பட்ட சாதுக்களுடைய சரிதத்தைக் கேட்பதாலும், அவர்களைத் தரிசிப்பதாலும், மகா பாபிகளும், தாழ்ந்த குலத்தில் ஜனித்தவர்களும் சுத்தர்களாவார்கள். நேரில் பேசுவது முதலியவையை அடைந்தவர்கள் சுத்தியடைவதில் என்ன சந்தேகம்?'' (சந்தேகமில்லையென்று கருத்து) என்று சொன்னார்.

26—34. இம்மாதிரியான பரமசிவனுடைய வார்த்தை காதுகளுக்கு ரஸாயனம் போலிருந்தது. அதனைக் கேட்டு மார்க்கண்டேயர் போதுமென்ற திருப்தியை அடையவில்லை. மேலும் அவர் மகா விஷ்ணுவின் மாயையைத் தரிசித்துப் பிரமித்துக் கஷ்டப்பட்டிருந்தமையால் பரமசிவனுடைய வாக்காகிய அமிருதத்தால் சுகத்தை அடைந்து பரமசிவனை நோக்கி, "ஈசுவரர்களுடைய போக்கு பிராணிகளால் அறிய முடியாதவை; ஏனென்றால், தமக்குத் தாழ்ந்த ஜனங்களை ஜகதீசர்கள் துதிக்கிறார்

கள். மேலும் அவர்கள் தர்மத்தைச் சொல்கிறார்கள்; தாம் அனுஷ்டிக்கிறார்கள்; அனுமோதித்திருக்கிறார்கள்; பிறர் செய்வதைத் துதிக்கிறார்கள்; இப்படிச் செய்வது பிறரை அனுஷ்டிக்கும்படி செய்வதற்காகவே. ஆனதால் தாழ்ந்தவர்களை நமஸ்கரிப்பது, துதிப்பது ஆகிய இவைகளால் உம்முடைய மகிமைக்குக் குறைவில்லை. சாதுக்களை எல்லாரும் பூஜிக்கவேண்டுமென்பதைக் காண்பிப்பதற்காகவே இப்படிச் செய்கிறார்கள். மேலும் பகவான் குணங்களைக்கொண்டு இந்தப் பிரபஞ்சத்தை சிருஷ்டித்து, தாம் அதில் அனுப்பிரவேசித்துக் கர்த்தாபோல் தோன்றுகிறார். சொப்பனத்தைப் பார்த்தவன் எப்படி உண்மையென்று நினைக்கிறானோ, அதுபோல் பகவான் கர்த்தாபோல் தோன்றுகிறார். முக்குணங்களுள்ளவரும், அவைகளை வசப்படுத்திக்கொண்டவரும் அத்துவிதீயரும், ஆசாரியரும் பிரம்மமுமாகிற பகவானுக்கு நமஸ்காரம். மேலானவராகிய உம்மை நேரில் தரிசித்தேன். உம்மைத் தரிசித்தால் மனிதன் பூர்ணகாமனுகவும், சத்தியகாமனுகவு மாகிறான். அப்படியிருக்க வேறு எந்த வரத்தைக் கேட்பேன்? ஆனாலும் பூர்ணகாமராகிய உம்மிடமாக ஒரு வரத்தை அபேட்சிக்கிறேன். உம்மிடத்தில் எனக்குப் பக்தி யிருப்பதுபோல் ஸ்ரீமந் நாராயணனிடத்திலும், அவருடைய பக்தர்களிடத்திலும் எனக்குப் பக்தி இருக்கும்படி அனுக்கிரகிக்கவேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்.

35—38. இப்படி நல்ல வார்த்தையாக மகரிஷியால் பிரார்த்திக்கப்பெற்ற பரமசிவன் பார்வதியால் அனுமோதிக்கப் பெற்று மகரிஷியை நோக்கி, "ஓ மகரிஷே! நீர் ஸ்ரீமந் நாராயணரிடத்தில் பக்தியுள்ளவர்; ஆனதால் உம்முடைய கீர்த்தியானது புண்யகரமாகக் கல்பம் வரையிலிருக்கும். உமக்குக் கிழத்தனமில்லை ; மரணமுமில்லை ; முக்காலத்து ஞானமும்,

ஆத்ம ஞானமும், வைராக்கியமும் உண்டாகட்டும். மேலும், புராணாசாரியராக இருக்கக் கடவீர்" என்று அனுக்கிரஹித்து, முக்கண்ணராகிய பகவான் பார்வதிக்கு மகரிஷி பிரளயத்தைப் பார்த்தது முதலியவைகளைச் சொல்லிக்கொண்டு தமது உலகஞ் சென்றார்.

39—42. அந்த மார்க்கண்டேயர் மகா யோக மகிமையை அடைந்து, பகவானிடத்தில் முக்கிய பக்தராகி இப்பொழுதும் சஞ்சரிக்கிறார். பகவானுடைய ஆச்சரியமான மாயா மகிமையை மார்க்கண்டேயர் பார்த்ததை உமக்குச் சொன்னேன். மேற்காட்டிய பகவானுடைய மாயா மகிமை அஞ்ஞானியாகிய ஜீவனுக்கு சம்ஸாரத்தை உண்டுபண்ணுகிறது (எல்லோருக்கும் பொதுவானது). அதன் மகிமையை அறியாமல் ஈசுவரனுடைய சங்கற்பத்தால் மார்க்கண்டேயருக்காக மாத்திரம் பிரளயம் காண்பிக்கப்பட்டதென்று சொல்லுகிறார்கள். ஸ்ரீமந் நாராயணனுடைய மகிமை பொருந்திய இந்த மார்க்கண்டேய சரிதத்தைக் கேட்பவர்களுக்கும், சொல்லுபவர்களுக்கும் கர்மத்தாலுண்டாகும் சம்ஸார துக்கம் நேரிடுகிறதில்லை" என்று சூதர் சொன்னார்.

## அத்தியாயம் 11

### கிரியா யோகமும் சூரியனுடைய பேதமும்

1—3. சௌனகர் சூதரை நோக்கி, "ஓ பாகவத! நீர் சகல சாஸ்திரங்களுடைய உண்மையை அறிந்தவர்; பிரம்ம வித்துக்களுக்குள் சிறந்தவர்; ஆனதால் உம்மைக் கேட்கிறோம். தாந்திரிகர்கள் பகவானை உபாசிப்பதில் சைதன்யகராகிய பகவானுக்குக் கைகால் முதலிய அவயவங்களையும் கருடன் முதலியவர்களையும், சக்கரம் முதலிய ஆயுதங்களையும்,

கௌஸ்துபம் முதலிய ஆபரணங்களையும் எப்படிக் கல்பிக்கிறார்கள்? அவைகளை எந்தத் தத்துவங்களைக்கொண்டு கல்பிக்கிறார்கள்? அந்தக் கிரியா யோகத்தைத் தெரிந்துகொள்ள விரும்பும் எங்களுக்கு இதனைச் சொல்லும். அந்தக் கிரியா யோகத்தால் மனிதன் மரண மற்றவனாகிறான்" என்று கேட்டார்.

4—29. அதனைக் கேட்ட சூதர் சௌனகரை நோக்கி, "பிரும்மா முதலியவர்களால் எவை சொல்லப்பட்டிருக்கின்றனவோ அந்த வைதிக, தாந்திரிக, வைஷ்ணவ விபூதிகளைச் சொல்லுகிறேன். பிரகிருதி, சூத்திரம், மகத், அகங்காரம், ஐந்து தன்மாத்திரைகள் ஆகிய ஒன்பது தத்துவங்களாலும் விகாரமயனாகிய விராட் உண்டுபண்ணப்பட்டிருக்கிறார். (பதினொன்று இந்திரியங்கள், ஐந்து பூதங்கள் ஆகிய 16 விகாரங்கள்) சைதன்யமுள்ள அந்த விராட்டினிடத்தில் மூவுலகங்களும் காணப்படுகின்றன. இதுவே புருஷனுடைய சுரூபம். அந்த சுரூபத்திற்குப் பூமியே பாதங்கள்; த்யுலோகம் தலை; வாயுவே மூக்குகள்; காதுகளே திக்குகள்; பிரஜாபதியே ஆண்குறி; மிருத்யுவே அபானம்; உலகபாலகர்களே கைகள்; சந்திரனே மனம்; யமனே புருவங்கள்; லஜ்ஜையே மேலுதடு; உலோபமே கீழுதடு; சந்திரிகையே தந்தங்கள்; ப்ரமமே கர்வம்; மலைகளே உரோமங்கள்; மேகங்களே தலை மயிர்கள். இந்த வியஷ்டி புருஷன் எப்படிப்பட்டவனோ, எவ்வளவு அளவுள்ளவனோ, சமஷ்டி புருஷனும் அப்படிப்பட்டவன்; அவ்வளவு அளவுள்ளவன் (தம்முடைய அளவினால் 84 அங்குலம் உள்ளவர்). அந்தப் புருஷன் கௌஸ்துபமென்ற வியாஜத்தால் தம்முடைய தேஜஸைத் தரிக்கிறார். (சுத்த ஜீவ சைதன்யமே கௌஸ்துபமாக இருக்கின்றது என்பது கருத்து.) அதனுடைய காந்தியே பகவானுடைய மார்பில் ஸ்ரீவத்ஸ மெனப்படுகிறது.

அநேக குணங்களுள்ள பகவானுடைய மாயையே வனமாலை யாக இருக்கிறது; சந்தஸ்ஸே பீதாம்பரமாக இருக்கிறது; மூன்று மாத்திரையுள்ள பிரணவமே பூணூலாக இருக்கிறது; சாங்கியம், யோகம் ஆகிய இரண்டும் பகவானுக்கு மகர குண்ட லங்களாக இருக்கின்றன; எல்லோராலும் நமஸ்கரிக்கப்பெற்ற பிரம்மலோகமே கிரீடமாக இருக்கிறது; பிரதானமே ஆதிசேஷ ஞகி, பகவானுக்கு ஆசனமாகவிருக்கிறது; தர்மம், ஞானம் முத லியவைகளுடன் கூடிய சத்துவகுணமே பகவானால் தரிக்கப்படும் தாமரை மலராக இருக்கிறது; மனோ பலம், இந்திரிய பலம், சரீர பலம் இவைகளுடன் கூடிய முக்கிய தத்துவமாகிய பிரா ணனே கதாயுதமாக இருக்கிறது. (பிராணனே முக்கியன்— சுருதி) ஜலத்தின் தத்துவமே சங்கமாக இருக்கிறது; தேஜஸே சுதர்சனமென்ற சக்கராயுதமாக இருக்கிறது; ஆகாயத்தின் தத் துவமே ஆகாயம்போல் நீலமான கத்தியாக இருக்கிறது; தமஸ்ஸே கேடகமாக இருக்கிறது; காலமே சார்ங்கமென்ற வில்லாக இருக்கிறது; கர்மமே பாணக்கூடாக இருக்கிறது; இந்திரியங்களே பாணங்களாக இருக்கின்றன; கிரியா சக்தியுள்ள மனம் அல்லது தேகாபிமானம் பகவானுக்கு ரதம்; அதன் அபிவியக்தியே (பூஜாதிகளில் பிரவிருத்தி) தன்மாத்திரைகள் (இந்திரிய விஷயங்கள்); பகவான் தரித்திருக்கும் அபய முத்திரை, வரத முத்திரை ஆகிய இவைகளால் வரங்கொடுப் பது முதலியவைகளைப் பகவானுடைய குணங்களாகத் தெரிந்து கொள்ளவேண்டும். அவருடைய ஆசனத்திலிருக்கும் பத்மா காரமான மண்டலத்தை யாக பூமியென்றே நினைக்கவேண்டும். (மூலத்திலிருக்கும் மண்டலம் என்னும் பதத்திற்கு சூரிய மண் டலம் அல்லது அக்னி மண்டலம் என்றும் அர்த்தம் சொல்ல லாம்.) ஆசாரியரிடம் பெற்றுக்கொண்ட மந்திர தீக்ஷையே சம்ஸ்காரமாகும். பகவானுடைய சிசுருஷையைச் சகல பாபங்

களையும் நிவர்த்தித்துக்கொள்வதற்காக மேற்காட்டியவண்ணம் நினைக்கவேண்டும். பகமென்ற சப்தத்திற்கு அர்த்தமாகிய ஐசுவரியத்தை விளையாட்டிற்காகத் தாமரை மலராகப் பகவான் வைத்துக்கொண்டிருக்கிறார்; தர்மத்தையும் கீர்த்தியையும் சாமரங்களாக வைத்துக்கொண்டிருக்கிறார்; நிர்ப்பயஸ்தானமாகிய வைகுண்டமே பகவானுக்குக் குடையாக இருக்கிறது; ரிக், யஜுஸ், சாமம் என்ற வேதமே கருடனாக இருக்கிறது. யக்ஞமே புருஷ ரூபமாக இருக்கிறது; சித் சுரூபமான பகவானுடைய அழிவற்ற சக்தியே ஸ்ரீதேவியாக இருக்கிறது; பாஞ்சராத்ரம் முதலிய ஆகமங்களே பார்ஷதர்களுக்கு அதிபதியாகிய விஷ்வக்ஸேனர்; அணிமா முதலிய எட்டுக் குணங்களே நந்தன் முதலிய துவாரபாலகர்கள். ஸ்ரீமந் நாராயணனே வாசுதேவர், சங்கர்ஷணர், பிரத்யும்னர், அனிருத்தர் என்ற நான்கு மூர்த்திகளாக உபாசிக்கப்படுகிறார். விஷயங்கள், இந்திரியம், ஞானம் ஆகிய இவைகளால் அந்தப் பகவானே விச்வன், தைஜஸன், பிராக்ஞன், துரீயனென்று சொல்லப்படுகிறார். இப்படி கை கால் முதலிய அவயவங்கள், கருடன் முதலிய உபாங்கங்கள், ஆயுதங்கள், ஆபரணங்கள் இவைகளுடன் அந்தப் பகவானாகிய ஈசுவரனே விசுவன் முதலிய பெயரை அடைகிறார். ஓ பிராம்மணர்களுக்குள் சிறந்தவரான சௌனக! வேதங்களுக்குக் காரணரும், எல்லாவற்றிற்கும் சாட்சியும், தம்முடைய மகிமையால் பூரணருமான பகவான் தம்முடைய மாயையால் உலகத்தைப் படைக்கிறார்; ரக்ஷிக்கிறார்; சங்கரிக்கிறார். அதனால் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்ற மூன்று பெயரை அடைகிறார். அவருடைய ஞானத்திற்கு ஒருபொழுதும் குறைவில்லை. ஆனாலும் பேதமுள்ளவர்போல் தோன்றுகிறார்; உண்மையில் பேதமில்லை. அவரிடத்தில் பக்தி செய்தவர்கள் அவரை ஆத்மாவாகவே தெரிந்துகொண்டிருக்கிறார்கள்.

அர்ச்சுனருடைய தோழனே! விருஷ்ணிகளுக்குள் சிறந்தவரே! கெட்ட அரசர்களுடைய வம்சத்திற்கு அக்கினியே! குறைவற்ற பராக்கிரமமுள்ளவரே! கோபிகைகளாலும், நாரதர் முதலியவர்களாலும் கானஞ் செய்யப்பெற்ற சுத்தமான கீர்த்தியுள்ளவரே! தம்முடைய சரிதத்தைக் கேட்பவர்களுக்கு மங்களத்தைக் கொடுப்பவரே! கோவிந்த! ஸ்ரீ கிருஷ்ண! உம்முடைய வேலைக்காரர்களான எங்களைக் காப்பாற்றும். எவன் காலையில் எழுந்திருந்து மகா புருஷனுடைய லட்சணமாகிய இதனை அவரிடத்தில் மனத்தைச் செலுத்தி ஜபிக்கிறானோ, அவன் ஹிருதய குகையிலிருக்கும் பரமாத்மாவைத் தெரிந்துகொள்வான்.

28—29. அதனைக் கேட்ட சௌனகர் சூதரை நோக்கி, "பரீக்ஷித்திற்குச் சுக மகரிஷி சூரியன் ஒவ்வொரு மாதத்திலும் ஏழு கணங்களுடன் சஞ்சரிக்கிறார் என்று சொன்னாரென்று சொன்னீரல்லவா? (ஐந்தாவது ஸ்கந்தத்தில்) ஈசுவரனால் நியமிக்கப்பெற்ற அவர்களுடைய பெயர்களையும், கர்மங்களையும் சொல்லும். சூரிய சுரூபியான ஹரியின் வியூகத்தைக் கேட்க விரும்புகிறோம்" என்று கேட்டார்.

30—51. அதனைக் கேட்ட சூதர் சௌனகரை நோக்கி, "சகல பிராணிகளுக்கும் ஆத்மாவாகிய ஸ்ரீ மகாவிஷ்ணுவின் அநாதியான மாயையால் இந்தச் சூரியன் உலக யாத்திரைக்காகப் படைக்கப்பெற்று உலகங்களில் சஞ்சரிக்கிறார். இந்தச் சூரியன் ஒருவரே உலகங்களுக்கு ஆத்மா; படைப்பவர்; இவரே மகாவிஷ்ணு; இவர் ஒருவரே சகல வேதங்களால் நிரூபிக்கப்படும் கிரியைகளுக்கு மூலம். ஆனாலும் உபாதி சம்பந்தத்தால் பலவகையாக மகரிஷிகளால் சொல்லப்பட்டிருக்கிறார். மேலும் காலம், தேசம், கிரியை, கர்த்தா, கரணம், சாதனம்,

காரியம், ஆகமம், திரவியம், பலன் என்று பகவான் தம்முடைய மாயையால் ஒன்பது பெயரை அடைந்திருக்கிறார். (காலம் - காலை முதலியவை. தேசம் - மேடு பள்ளமில்லாமல் சமமாக இருப்பது. கிரியை - அனுஷ்டிப்பது. கர்த்தா - பிராம்மணன் முதலிய செய்பவன். காரணம் - சுருக் முதலியவை. காரியம் - யாகம் முதலியவை. ஆகமம் - மந்திரங்கள். திரவியம் - புரோடாசம் முதலியவை. பலன் - சுவர்க்க முதலியவை) சித்திரை முதலிய பன்னிரண்டு மாதங்களிலும் பகவான் கால சுரூபியாகப் பன்னிரண்டு பெயர்களுடனும் கணங்களுடனும் உலக யாத்திரையைச் செய்துகொண்டு சஞ்சரிக்கிறார். தாதா வென்ற சூரியனும், கிருகஸ்தலீயென்ற அப்ஸரஸும், ஹேதி யென்ற ராக்ஷசனும், வாசுகியென்ற நாகமும், ரதகிருத் என்ற யக்ஷனும், புலஸ்தியரென்ற மகரிஷியும், தும்புருவென்ற கந்தர்வனும் சித்திரை மாதத்தை நடத்துகிறார்கள். அரியமா, புஞ்சிகஸ்தலீ, பிரஹேதி, கஞ்சநீரன், அதௌஜஸ், புலஹர், நாரதர் என்ற மேற்காட்டிய முறைப்படி ஏழு தேவர்கள் வைசாகத்தை நடத்துகிறார்கள். ஜியேஷ்டமென்ற ஆனி மாதத்தை மித்திரன், மேனகை, பௌருசேயன், தக்ஷகன், ரதசுவனன், அத்ரி, ஹாஹா இவர்கள் நடத்துகிறார்கள். வருணன், ரம்பை, சித்திரசுவனன், சுக்கிரனென்ற நாகம், சகஜன்யன், வசிஷ்டர், ஹூஹூ என்பவர்கள் ஆஷாடமாகிய ஆடி மாதத்தை நடத்துகிறார்கள். இந்திரன், பிரம்லோசா, சரியன், ஏளாபுத்திரன், சுரோதா, அங்கிரஸ், விசுவாவசு ஆகிய இவர்கள் சிராவண மாதமாகிய ஆவணி மாதத்தை நடத்துகிறார்கள். விவசுவான், அநும்லோசா, வியாக்கிரன், சங்கபாலன், ஆசாரணன், பிருகு, உக்கிரசேனர் ஆகிய இவர்கள் பாத்திரபத மாதமாகிய புரட்டாசி மாதத்தை நடத்துகிறார்கள். பூஷா, கிருதாசீ, வாதன், தனஞ்

சயன், சுருசி, கௌதமர், சுஷேணன் ஆகிய இவர்கள் மாக மென்ற மாசி மாதத்தை நடத்துகிறார்கள். (கூர்ம புராணத்தை அநுசரித்து வரிசை தவறிச் சொல்லப்பட்டிருக்கிறது.) பர்ஜனியர், சேனஜித், வர்ச்சஸ், ஐராவதன், கிருது, பரத்வாஜர், விசுவன ஆகிய இவர்கள் பால்குனமென்ற பங்குனி மாதத்தை நடத்துகிறார்கள். அம்சு, ஊர்வசி, வித்யுத்சத்ரு, மகாசங்கன், தார்க்ஷயன், கச்யபர், ரிதசேனர் ஆகிய இவர்கள் மார்கழி மாதத்தை நடத்துகிறார்கள். பகர், பூர்வசித்தி, ஸ்பூர்ஜன், கார்க்கோடகன், ஊர்ணன், ஆயுஸ், அரிஷ்டநேமி ஆகிய இவர்கள் புஷ்யமாதமான தைமாதத்தை நடத்துகிறார்கள். துவஷ்டா, திலோத்தமா, பிரம்மபேதன், கம்பளாசுவன், சதஜித், ஜமதக்னி, திருதராஷ்டிரர் ஆகிய இவர்கள் ஐப்பசி மாதத்தை நடத்துகிறார்கள். விஷ்ணு, ரம்பை, மகாபேதன், அசுவதரன், சத்யஜித், விசுவாமித்திரர், சூரியவர்ச்சஸ் ஆகிய இவர்கள் கார்த்திகை மாதத்தை நடத்துகிறார்கள். பகவானாகிய விஷ்ணுவின் சுரூபமாகிய ஆதித்யருடைய விபூதிகள் இவை. இரண்டு சந்தியாகாலங்களிலும் இந்த சூரியனுடைய விபூதிகளை ஸ்மரிப்பவர்களுக்கு சகல பாபங்களும் நிவர்த்தியாகின்றன. இப்படி சூரியன் ஒவ்வொரு மாதத்திலும் மேற்காட்டிய அப்ஸரஸ் முதலியவர்களுடன் சஞ்சரித்து, ஜனங்களுக்கு இவ்வுலகத்திலும் பரலோகத்திலும் சுகத்தையடையும்படி நல்ல புத்தியைக் கொடுக்கிறார். அந்தந்த மாதத்தில் மகரிஷிகள் சாமம், ரிக், யஜுஸ் இவைகளிலுள்ள ஸௌர மந்திரங்களால் சூரியனைத் தோத்திரஞ்செய்கிறார்கள். அந்த மாதத்துக் கந்தர்வன் கானம் செய்கிறான். அப்ஸரஸ் நர்த்தனம் செய்கிறாள். நாகங்கள் ரதத்தைச் சுற்றிக்கொள்ளுகின்றன. யக்ஷர்கள் ரதத்தை நடத்துகிறார்கள். பலிஷ்டர்களான ராக்ஷஸர்கள் ரதத்திற்குப் பின்புறத்திலிருந்து தள்ளுகிறார்கள். வாலகில்யர்களென்ற

60,000 மகரிஷிகள் சூரியனுடைய ரதத்திற்குமுன் சூரியனைப் பார்த்துக்கொண்டே தோத்திரஞ்செய்து செல்லுகிறார்கள். இப்படி ஆதி அந்தமில்லாதவரான பகவானாகிய ஸ்ரீமகாவிஷ்ணு ஒவ்வொரு மாதத்திலும் தம்முடைய சுரூபத்தைப் பிரித்துக் கொண்டு காலத்தை நடத்துகிறார்.

## அத்தியாயம் 12

### பாகவதத்தின் சுருக்கம்

1—41. பகவத் பக்தியாகிய மகா தர்மத்திற்கும், சகல ஜகத்தையும் படைப்பவரான ஸ்ரீகிருஷ்ணனுக்கும், பிராம்மணர்களுக்கும் நமஸ்காரஞ்செய்து அனுதிகளான தர்மங்களை (புராணார்த்தத்தை)ச் சொல்லுகிறேன். "மனிதர்கள் எதனைச் செய்யவேண்டும், எதனைக் கேட்கவேண்டும்" என்று நீங்கள் கேட்டதற்குப் பதிலாக அற்புதமான விஷ்ணுவின் சரிதத்தைச் சொன்னேன். ஆதி அந்தம் இல்லாதவரும், இந்திரியங்களுக்கு அதிபதியும், நாராயணருமான ஹரி இந்தப் பாகவதத்தில் வருணிக்கப்பெற்றிருக்கிறார். (தேவதா காண்டத்தில் சொல்லிய அர்த்தம் இந்த பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதென்று காட்டப்பட்டது.) மேலும், நிர்க்குணமும், ஜகத்தைப் படைப்பது, காப்பாற்றுவது, சங்கரிப்பது இவைகளும் காட்டப்பட்டன. (பிரம்மகாண்டத்தின் பொருள் சொல்லப்பட்டதென்று காட்டப்பட்டது). பக்தி யோகமும், அதனாலுண்டாகும் வைராக்கியமும் நிரூபிக்கப்பட்டது. (கர்மகாண்டத்தின் அர்த்தம் காட்டப்பட்டது.) மேலும் பரீக்ஷித்தின் உபாக்கியானம், நாரதருடைய முன்ஜன்மம் முதலிய விருத்தாந்தம், பிராம்மண சாபத்தால் பரீக்ஷித்து பிராயோபவேசஞ் செய்தது, பிரம்மரிஷியான சுகருக்கும் பரீ

கூித்திற்கும் நேர்ந்த சம்வாதம் ஆகிய இவைகள் நிரூபிக்கப் பட்டிருக்கின்றன. (முதல் ஸ்கந்தத்தில் என்று தாத்பரியம்). யோகதாரணையால் பிராணனை வெளிப்படுத்தி, அர்ச்சிராதி கதிகளை அடையும் வகை, நாரதருக்கும் பிரம்ம தேவருக்கும் நேர்ந்த ஸம்வாதம், மகத் தத்துவம் முதலாக விராட்ரூபம் ஆகிய இவைகள் (இரண்டாவது ஸ்கந்தத்தில்) வருணிக்கப்பட்டிருக்கின்றன. விதுரர், உத்தவர் இவர்களுடைய சம்வாதம், விதுரர் மைத்திரேயரைச் சந்தித்து அவருடன் பேசியது, புராண சம்ஹிதையைப்பற்றிக் கேட்டது, மகா புருஷன் பிரளயத்தில் மௌனமாயிருந்தது, பிரகிருதி சர்க்கம் விகிருதி சர்க்கம் ஏழு, பிரம்மாண்டத்தின் உற்பத்தி, அதிலிருந்து விராட்புருஷன் உண்டானது, ஸ்தூலமான காலம், சூட்சுமமான காலம், இவைகளுடைய கதி, பகவானுடைய நாபியிலிருந்து உலக பத்மத்தின் உற்பத்தி, சமுத்திரத்தில் மூழ்கிய பூமியைப் பகவான் வெளியில் கொண்டுவந்தது, இரண்யாக்ஷனைக் கொன்றது, ஊர்த்வ ச்ரோதஸ், அவாக் ச்ரோதஸ், திர்யக் ச்ரோதஸ் ஆகிய இவர்களைப் படைத்தது, ருத்திரர் சிருஷ்டித்த கணங்கள், பிரம்மதேவருடைய சரீரத்தின் ஒரு பாதி பெண்ணாகவும், மற்றொரு பாதி புருஷனாகவும் பிரிந்தது, அதிலிருந்து மநுவும் சதரூபையும் உண்டானது, தர்மபத்னிகளின் புத்திர பௌத்திராதி வம்சம், கர்த்தமரென்ற பிரஜாபதியின் வம்சம், கபிலருடைய அவதாரம், புத்திமானாகிய கபிலருக்கும் தேவஹூதிக்கும் நேர்ந்த சம்வாதம் ஆகிய இவைகள் (மூன்றாவது ஸ்கந்தத்தில்) வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. ஒன்பது பிரஜாபதிகளின் வம்சம், தட்சருடைய யாகத்திற்கு விக்கினம் நேர்ந்தது, துருவருடைய சரித்திரம், பிருதுவின் சரிதம், பிராசீன பர்ஹிஸ்ஸின் சரித்திரம் ஆகிய இவைகள் (நான்காவது ஸ்கந்தத்தில்) வர்ணிக்கப்பட்டன. நாரதருடைய சம்வாதம், பிரியவிரதருடைய

சரிதம், நாபியின் சரித்திரம், பரதருடைய சரித்திரம், ரிஷபருடைய சரித்திரம், த்வீபம், வர்ஷம், சமுத்திரம், மலை, நதி ஆகிய இவைகளின் ஸ்திதி இவைகள் (ஐந்தாவது ஸ்கந்தத்தில்) நிரூபிக்கப்பட்டன. தக்ஷருடைய உற்பத்தி, அவருடைய புத்திரிகளின் சந்ததி, அவர்களிடமிருந்து தேவர்கள், அசுரர்கள், மனிதர்கள், திர்யக் ஜாதிகள், நாகங்கள், பறவைகள் இவைகளின் உற்பத்தி முதலியவை (ஆறுவது ஸ்கந்தத்தில்) நிரூபிக்கப்பட்டன. விருத்திராசுரன் ஜனித்தது, அவனுடைய நாசம், திதியின் புத்திரர்களுடைய நாசம், பிரகலாதருடைய சரிதம் இவைகள் (ஏழாவது ஸ்கந்தத்தில்) சொல்லப்பட்டன. மன்வந்தரங்கள், கஜேந்திர மோக்ஷம், ஒவ்வொரு மன்வந்தரங்களிலும் பகவானுடைய அவதாரம், ஹயக்ரீவ அவதாரம், கூர்மாவதாரம், மத்ஸ்யாவதாரம், நரசிம்ஹாவதாரம், வாமனாவதாரம், அமிருதத்திற்காகத் தேவர்கள் பாற்கடலைக் கடைந்தது, தேவாசுர யுத்தம் இவைகள் (எட்டாவது ஸ்கந்தத்தில்) வர்ணிக்கப்பட்டன. ராஜவம்சம், இக்ஷ்வாகுவின் உற்பத்தி, அந்த வம்சத்தில் சுத்யும்னன் ஜனித்தது, இளோபாக்கியானம், தாரோபாக்கியானம், சூரிய வம்சத்தின் சரிதம், சசாதன் முதலிய அரசர்களுடைய சரித்திரம், சுகன்யோபாக்கியானம், சையாதி, ககுஸ்தர், கட்வாங்கர், மாந்தாதா, சௌபரி, சகரர் இவர்களுடைய சரித்திரங்கள், பாபங்களை நிவர்த்திக்கக்கூடிய ஸ்ரீராமனுடைய சரிதம், நிமி சரீரத்தை விட்டது, ஜனகர்களுடைய உற்பத்தி, பரசுராமன் க்ஷத்திரியர்களைக் கொன்றது, சந்திர வம்சத்தில் பிறந்த ஐளர், யயாதி, நகுஷர், துஷ்யந்தருடைய புத்திரரான பரதர், சந்தனு, பீஷ்மர், யயாதியின் ஜ்யேஷ்ட குமாரனாகிய யது ஆகிய இவர்களுடைய சரித்திரங்கள் இவைகள் (ஒன்பதாவது ஸ்கந்தத்தில்) நிரூபிக்கப்பட்டன. யதுவின் குலத்தில் ஜகதீசனாகிய பகவான் கிருஷ்ணனென்ற திவ்ய நாமதேயத்துடன் வசுதேவருடைய கிருகத்தில்

அவதரித்துக் கோகுலத்தில் வளர்ந்தது, பின்பு அவர் செய்த அற்புதமான லீலைகள், பூதனையின் பிராணனையும் பாலையும் குடித்தது, சகடத்தை உடைத்தது, திருணாவர்த்தன், பகன், வத்ஸன், அகன் இவர்களை வதஞ்செய்தது, பிரம்மதேவருக்கு மாயா விலாசத்தைக் காண்பித்தது, தேனுகன், அவனுடைய சகோதரன், பிரலம்பன் இவர்களுடைய வதம், காட்டுத் தீயிலிருந்து கோபர்களைக் காப்பாற்றியது, காளியனை அடக்கியது, நந்தரை சர்ப்ப பயத்திலிருந்து இரட்சித்தது, கோபகுமாரிகள் விரதஞ்செய்தது, அதனால் ஸ்ரீ கிருஷ்ணன் அவர்களிடம் சந்தோஷத்தை அடைந்தது, தீட்சித பத்னிகளை பகவான் அனுக்கிரகித்தது, தீட்சிதர்கள் பச்சாத்தாபத்தை அடைந்தது, கோவர்த்தன மலையைப் பகவான் குடையாகப் பிடித்தது, இந்திரனும் காமதேனுவும் ஸ்ரீ கிருஷ்ணனைப் பூஜித்து அபிஷேகஞ்செய்தது, ராத்திரியில் பகவான் ஸ்திரீகளுடன் கிரீடித்தது, துர்ப்புத்தியான சங்கசூடன், அரிஷ்டன், கேசி இவர்களுடைய வதம், அக்ரூரர் கோகுலத்திற்கு வந்தது, ராமகிருஷ்ணர்கள் மதுரா நகரஞ் சென்றது, கோகுலத்திலுள்ள ஸ்திரீகள் பிரலாபித்தது, பகவான் மதுரையில் யானை, முஷ்டிகன், சாணூரன், கம்சன் ஆகிய இவர்களைக் கொன்றது, சாந்தீபினியென்ற ஆசாரியருடைய புத்திரனை யமலோகத்திலிருந்து ஸ்ரீ கிருஷ்ணன் கொண்டுவந்து கொடுத்தது, உத்தவர், பலராமன் இவர்களுடன் மதுரையில் பகவான் வசித்து யாதவர்களுக்குப் பிரியமானவைகளைச் செய்துகொண்டிருந்தது, பலமுறை ஜராசந்தனுடைய சைனியத்தைக் கொன்றது, யவனனைக் கொன்றது, துவாரகா நகரத்தில் பந்துக்களைக் கொண்டுவைத்தது, தேவலோகத்திலிருந்து பாரிஜாதம், சுதர்மா இவைகளைத் துவாரகைக்குக் கொண்டுவந்தது, சத்துருக்களை ஜயித்து ருக்மிணியைக் கொண்டுவந்தது, பரமசிவனை ஜயித்துப் பாணாசுரனுடைய கைகளை வெட்டியது, நரகாசுரனைக் கொன்று ராஜகன்னிகைகளைக் கொண்டு

வந்தது, சிசுபாலன், பௌண்டிரகன், சால்வன், தந்தவக்திரன், சம்பரன், துவிதன், பீடன், முரன், பஞ்சஜனன் இவர்களுடைய மகிமை, அவர்களுடைய வதம், காசியைக் கொளுத்தியது, பாண்டவர்க[illegible]நிமித்தமாக வைத்துக்கொண்டு பூமிக்குச் சுமையாக விரு[illegible]களைப் பகவான் கொன்றது ஆகிய இவைகள் (பத்தாவ[illegible]ஸ்கந்தத்தில்) வர்ணிக்கப்பட்டன.

42—43. பின்னும் பிராம்மண சாபமென்ற வியாஜத்தால் பகவான் தம்முடைய வம்சத்தையும் சங்கரித்தது, நாரதருக்கும் வஸுதேவருக்கும் நேர்ந்த ஸம்வாதம், உத்தவருக்கும் பகவானுக்கும்நடந்த ஆத்மவித்யை, தர்மம் இவைகளைப்பற்றிய அற்புதமான ஸம்வாதம், பகவான் தம்முடைய யோக மகிமையால் மனுஷ்யலோகத்தைவிட்டு வைகுண்டஞ் சென்றது ஆகிய இவைகள் (11-ஆவது ஸ்கந்தத்தில்) வர்ணிக்கப்பட்டன.

44—46. யுகங்களின் லக்ஷணம் அவைகளின் விருத்தி, கலியுகத்தில் மனிதர்களுக்கு நேரும் உபத்திரவம், நான்கு விதமான லயங்கள், மூன்று வகையான உற்பத்தி, அரசர்களுக்குள் சிறந்தவரான பரீக்ஷித்து சரீரத்தை விட்டது, வியாஸ மஹரிஷி வேதசாகைகளைப் பிரித்தது, மார்க்கண்டேயருடைய புண்ணியமான கதை, ஜகத் சுருபியான சூரியனுடைய சுருபம் ஆகிய இவைகள் (12-ஆவது ஸ்கந்தத்தில்) சொல்லப்பட்டன.

47—69. ஓ சிறந்த பிராம்மணர்களே ! நீங்கள் எதைச் சொல்லும்படி கேட்டுக்கொண்டீர்களோ, அந்தப் பகவானுடைய லீலாவதாரங்கள், சரித்திரங்கள் இவைக ளெல்லாவற்றையும் சொன்னேன். கிணறு முதலியவைகளில் விழும்பொழுதும், படி முதலியவைகளால் தடுக்கப்பெற்று பூமியில் விழும் பொழுதும், வியாதியால் பீடிக்கப்பட்டபொழுதும், தும்மும் பொழுதும் தெய்வச் செயலாக ஸ்ரீமந் நாராயணனுக்கு நமஸ்காரம்

என்று சொல்பவனுக்குச் சகல பாபங்களும் நிவர்த்தியாகின் றன. அனந்தனாகிய பகவானுடைய நாமங்களை உச்சரிப்ப தாலும், பகவானுடைய திவ்ய சரித்திரங்களைக் கேட்பதாலும், பகவான் அவர்களுடைய ஹ்ருதயத்தில் பிரவேசித்து சகல பாபங்களையும் நிவர்த்திக்கிறார். சூரியனால் இருள் நீக்கப்படு வதுபோலும், பெருங்காற்றினால் மேகங்கள் விலக்கப்படுவது போலும் பாபங்கள் பகவானால் விலக்கப்படுகின்றன. எந்தக் கதையில் பகவானுடைய கதையில்லையோ, அது கெட்ட கதையே யாம். எது பகவானுடைய சரித்திரமுள்ளதோ, அதுவே சத்தியமானது; அதுவே மங்களம்; அதுவே புண்ணியம். எந்தக் கிரந்தத்தில் உத்தம சுலோகனாகிய பகவானுடைய சரித்திரம் வர்ணிக்கப்பட்டிருக்கிறதோ, அதுவே அழகுள்ளது; புதிது புதி தாக ஆசை உண்டுபண்ணக்கூடியது; அடிக்கடி மனத்திற்கு மிக்க சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது; அதுவே துக்கமாகிய சமுத்திரத்தை வற்றும்படி செய்யக்கூடியது; எதில் ஸ்ரீ பக வானுடைய சரிதமில்லையோ, அந்த சுலோகம் அற்புதமான பதமுள்ளதானாலும் அதில் ஹம்ஸம் போன்ற பெரியோர்கள் பிரியப்படார்கள். காக்கை போன்ற தாழ்ந்த ஜனங்கள் தாம் அதை ஆதரிப்பார்கள். ஒவ்வொரு சுலோகங்களிலும் அபத்தம் இருந்தாலும், பகவானுடைய சரித்திரங்களுள்ளதானால் அதை சாதுக்கள் கேட்கிறார்கள்; கானஞ் செய்கிறார்கள்; படிக்கிறார் கள். மோக்ஷத்திற்குச் சாதனமான ஞானமானாலும் பகவத் பக்தி இல்லாவிட்டால் அபரோக்ஷ சாக்ஷாத்காரத்தைக் கொடுக்கிற தில்லை. அப்படியிருக்க அனுஷ்டிக்கும்பொழுதும், பல காலத் திலும் அமங்களமாக இருக்கும் யாகம் முதலிய கர்மங்க ளும் பகவதர்ப்பணம் செய்யப்படாவிடில் எப்படி சோபிக்கும்? (விளங்காதென்று கருத்து). அவரவர்களுடைய ஜாதிகளுக்கும் ஆசிரமங்களுக்குமுரிய தான தர்மத்தை அனுஷ்டிப்பதால்

இர்ா [illegible] பகவானுடைய கதையைக் கோா [illegible] ரில் பக்தி உண்டாகும்; அதனால் அபீ [illegible] சாந்தி உண்டாகும்; சித்தம் சுத்த மா [illegible] பக்தி ஸ்திரமாகும்; ஞானம், விஞ்ஞா னம் [illegible] ஆகிய இவைகள் உண்டாகும். ஓ சிறந்த பிரா [illegible] ளை ! நீங்கள் மிக்க அதிர்ஷ்டமுள்ளவர்கள்; சகல உல [illegible] திற்றும் ஆத்மாவாகவும், எல்லோருக்கும் தேவ னும், சர்வேசுவரனுமான ஸ்ரீமந் நாராயணனை ஹிருதயத்தில் வைத்துக்கொண்டு வேறிடத்தில் மனத்தைச் செலுத்தாமல் அடிக்கடி தியானம் செய்கிறீர்கள். மேலும், வெகு காலத்திற்கு முன் பரீக்ஷித்து மகாராஜன் பிராயோபவேசம் செய்த சமயத் தில் மகரிஷிகள் கேட்டிருக்க, சுகரிடமாக ஆத்ம தத்துவத் தைக் கேட்டிருந்தேன். அதனை இப்பொழுது நீங்கள் எனக்கு ஞாபகப்படுத்தினீர்கள். ஆனதால் அந்தப் பகவானாகிய வாசு தேவருடைய மாஹாத்மியத்தைச் சொன்னேன்.

அது சகல பாபங்களையும் நிவர்த்திக்கக்கூடியது. பகவா னுடைய சரிதங்களே கானஞ் செய்யக்கூடியவை. ஒரு யாம மாவது, க்ஷணமாவது வேறு ஞாபகமற்று எவன் இந்தப் புராணத்தையாவது, இதில் ஒரு சுலோகத்தையாவது, அதில் பாதியையாவது, மீதியில் பாதியையாவது, அதில் பாதியையா வது சிரத்தையுடன் பிறருக்குச் சொல்லுகிறானோ, கேட்கிறானோ, அவனுடைய ஆத்மா சுத்தமாகிறது. ஏகாதசி, துவாதசி இந்தத் தினங்களில் படிப்பவனுக்கும், கேட்பவனுக்கும் ஆயுள் விருத்தியாகும். ஆகாரமில்லாமல் படிப்பவனுக்குச் சகல பாபங் களும் நிவர்த்தியாகும். புஷ்கரம், மதுரை, துவாரகை ஆகிய இந்த க்ஷேத்திரங்களில் உபவாஸமிருந்து எவன் இந்தப் பாக வத ஸம்ஹிதையை [illegible] டிக்கிறானோ, அவனுக்கு சகல பயங்க ளும் நிவர்த்தியா [illegible] மோட்சத்தை அடைவானென்று